

இந்திரற்கும் பிரமற்கும் முதல்வன் தன்னை
  இருநிலம்கால்தீநீர் விண் பூதம் ஐந்து ஆய்
செந்நிறத்தமிழோசை வடசொல்லாகித்
  திசை நான்குமாய்த் திங்கள் ஞாயிருகி
அந்தரத்தில் தேவர்க்கும் அறியலாகா
  அந்தணனை அந்தணர்மாடு அந்திவைத்த
மந்திரத்தை மந்திரத்தால் மறவாது என்றும்
  வாழுதியேல் வாழலாம் மடநெஞ்சமே,

(திருநெடுந்தாண்டகம் - 4)

இந்திரனுக்கும் பிரம்மனுக்கும் காரணபூதனாய், பெரியதான பூமி, காற்று, நெருப்பு, நீர், ஆகாயம் ஆகிய ஐந்து பூதங்களுக்கும் தலைவனாய் (படைத்தலைவனாய்), செவ்விய தமிழ்ப் பிரபந்தங்களைப் பிரகாசிப்பவனாய், வடமொழியில் உள்ள வேதங்களையும் பிரகாசிப்பித்தவனாய், நான்கு திசைகளில் உள்ள எல்லா பொருள்களுக்கும் உள்ளொளியாய், சந்திர சூர்யர்களுக்கும் தலைவனாய், இவ்வாறு எல்லா பொருள்களுக்கும் மூலகாரணுய் பரவி இருந்து, தேவர்களாலும் அறியமுடியாத சுத்த ஸ்வபாவனாய் பிராமணர்களுக்கு விருப்பமான வேதங்களின் முடிவிலே இருக்கின்ற பரம மந்த்ரமான ஸர்வேஸ்வரனை திருமந்த்ரத்தாலே தொடர்ந்து சேவித்தோமேயானால், நெஞ்சமே, இந்த ஆத்மா இருக்குமளவு நல்வாழ்வு பெறலாமே.



# ஸப்தகிரி

## ஜனவரி - 1994


தனிப்பிரதி ரூ. 2 மலர் 24

வருடச்சந்தா ரூ. 24 இதழ் 8



சிறப்பாசிரியர்

திரு. [illegible] மூர்த்தி, ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

ஆசிரியர்:

திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.,

துணையாசிரியர்:

திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்:

திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு:

EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.


### உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

முகப்பட்டை : காக்கும் தெய்வம் வேங்கடவன்.

பின்னட்டை : போகிப் பண்டிகை.

முதல் உள்ளட்டை : திருமழிசையாழ்வார்.

2வது உள்ளட்டை : தொண்டரடிப்பொடியாழ்வார்.

JAGADISH

# உங்களுடன்......

இப்போதுதான் மலர்ந்தது போல் இருந்தது 1993-ஆம் ஆண்டு. இதோ அது முடிந்து, 1994-ஆம் ஆண்டு நம்வாழ்வில் அடியெடுத்து வைத்துள்ளது. தமிழ் வருடப்பிறப்பு நாளைவிட ஆங்கில ஆண்டின் முதல்நாள் தேசிய அளவில் நம் வாழ்வில் தனிச்சிறப்பு பெற்றுள்ளது என்பது மறைக்கமுடியாத உண்மையாகும். இப்புத்தாண்டின் முதல்நாள்தான் இன, இட, மொழி, நிறம் கடந்த ஒரு மகிழ்ச்சிகரமான நாளாக பொதுவாக எல்லா நாடுகளும் ஒருங்கே கொண்டாடி மகிழும் வாய்ப்பாக அமைந்துவிட்டது.

இந்த மகிழ்ச்சிகரமான நாள் வந்ததை அறிகிறோம்; வரவேற்கிறோம்; ஆரவாரிக்கின் றோம். இந்த ஆண்டு எவ்வாறு சென்றது, முடிந்தது என்பதை சிந்திக்காமலேயே அடுத்த ஆண்டு முதல்நாளை வரவேற்கத் துடிக்கின்றோம். கடந்த ஆண்டின் ஓட்டத்தைச் சிந் திக்க மறந்தோமா அல்லது சிந்திக்க விருப்பமில்லையா என்ற வினாவிற்கு - ஐயத்திற்கு விடைகண்டால் நம்வாழ்வில் ஒரு பொருள் இருக்கும்.

விஞ்ஞான உலகத்தின் வேகத்தால், அதிசயத்தால் முதுமைக்கு இளமைப்பூச்சு தரப் படலாம். இறப்பிற்குக் காலக்கெடு நீட்டிக்கப்படலாம். ஆனால் மரணத்திற்கு ஓய்வு தரமுடியாது என்பது இயற்கையின் தீர்ப்பாகும். கடிகாரத்தின் முள்ளைப்போன்று, பூமி யின் சுழற்சியை முன்னுக்கோ, பின்னுக்கோ நகர்த்திடமுடியாது. ஆம், காலதேவனின் ஓட்டத்தைத் தடுத்திடவோ, குறைத்திடவோ முடியாது. தவழும் குழந்தை நடந்து பார்த் திட தாய்க்கு ஆசை. நடந்திடும் குழந்தைக்கு ஓடிட ஆசை. வளர்ந்திட்ட மனிதனுக்கு அனுபவிப்பதில் ஆசை. தள்ளாடும் வயதில் மனிதனுக்கு பாசத்தில் மூழ்கிட ஆசை. ஆக, மனித உயிர்களுக்கு இறுதிவரை மகிழவே ஆசை. இவ் ஆசையில் அவன் அசைபோட மறந்தது, நாளும் கிழக்கில் உதித்து மேற்கில் மறையும் ஆதவனின் காலடி ஓசையினை. நம் ஆசையில், அவ்வோசையை மட்டுமா மறந்தோம் நாம்? நம்மை நாமே மறந்தோமே! உண்டு உறங்கி மகிழ்ந்த நாம் உணர்ந்து, உயர நினைத்தோமா! பிறந்த அக்கணமே காலம் எனும் சிலந்தி வலையில் அகப்பட்ட பூச்சியே நாம் என்பதை மறந்தோம். வலையில் அகப்பட்ட பூச்சியானது, தன்னை விடுவித்துக்கொள்ள தன் உடலை உதறிக்கொள்வது, உலக ஆசைகளில் ஈடுபட்டுக் கைகால் தெரியாமல் குதித்து எக்காளமிடும் மனிதனின் நிலைமையையே தெரிவிக்கிறது. அப்பூச்சியின் செயல்பாடுகள் அடங்கும் வகையில், சிலந்தி அப்பூச்சியை நெருங்கி அதைச்சுற்றி வலைபின்னி அதன் ஆட்டத்தை முடித்துவிடுகிறது. ஆம், காலதேவன் நம் கணக்கை அப்படித்தான் முடிக்கின்றான்.

குறையில்லாத இனமோ, தவறு செய்யாத மனிதனோ இவ்வுலகில் இல்லை. அக்குறை களைந்து, தவறுகளைத் திருத்திக் கொள்வதே மனிதப்பிறவியின் அடிப்படை நோக்கமாகும். இந்த மாற்றங்களை மனிதன் தன்வாழ்வில் எந்த நிலையிலும் மேற்கொள்ள வேண்டும். மனிதன் வளர வளர அவனுடைய பலவீனங்கள் களையப்படலாம். அல்லது மேலும் பெருகவும் கூடும். தவறுகள் திருத்தப்படலாம் அல்லது அதிகமாகலாம். ஆனால் மனிதன் உயரவும், தாழவும் வழிவகுக்கக் கூடிய பாதைகளாக அவனுடைய மனமுதிர்ச்சியும் அறிவின் ஆற்றலும்தான் பெரிதும் காரணங்களாக அமைகின்றன. இந்த அஸ்திவார அமைப்பினை மனிதன் காலம் கடந்து பெற்றானாயின் அது "கண்கெட்டபிறகு சூர்ய நமஸ்கார"த்திற்கு ஒப்பாகும். கடந்து வந்த, கடக்கவிருக்கும் பாதைகளை எண்ணிப்பார்த்து, தன்னையே ஒரு 'சுயபரிசோதனை'க்குள்ளாக்கிக் கொள்ள வேண்டும். இல்லையெனின் மாற்றங்களை அவன் வாழ்வில் ஏற்படுத்திக் கொள்வதோ அல்லது தன் சந்ததியினர்க்குத் தான் ஒரு வழிகாட்டியாக அமைவதோ என்பது என்றும் முடியாத ஒரு நிலையாகத்தான் இருக்கும்.

ஆண்டின் துவக்கநாள் நல்ல நாளாக இருக்கவே மனிதன் விரும்புகின்றான். அன்று ஒரு நல்ல செய்தியோ நல்ல நிகழ்ச்சியோ, அவன் எதிர்கொள்வானாயின், அந்த ஆண்டு முழு வதும் மகிழ்ச்சியாக அமையும் என்றே எதிர்பாக்கின்றான். இந்த உளவியல் மனப்பான்மை பொதுவாக எல்லா சமயத்தாரிடமும் உள்ளது. ஆனால் இந்த நாளின் துவக்கத்தை தன்னல நோக்கத்தோடு பார்க்காது, உலக நன்மையினை, மனிதநேய மேம்பாட்டினை மனதிற்கொண்டு நோக்குவானாயின், அதுவே அந்நாளினை மகிழ்ச்சிகரமான பொன்னாளாக கொண்டாடுவதில் பயன் இருக்கும்.

(48-ஆம் பக்கம் பார்க்க)

# திருமங்கையாழ்வாரின் பாகவத நிஷ்டை

டாக்டர் எ.வி. ரெங்காச்சாரியார்
ஆழ்வார்திருநகரி.

திருவுக்கும் திருவான செல்வன், தெய்வத்துக்கரசன், உருவச்செஞ்சுடராழிவல்லான், உலகுமுண்ட பெருவாயன் என்று ஏற்றம் பெற்ற எம்பெருமானைத் தொழுவதை விடப் பேரானந்தம் தருவது எதுவும் இல்லை என்பது மயர்வற மதிநலம் அருளப் பெற்ற ஆழ்வார்களின் அமுதமொழி. ஆழ்வார்களுக்குள் நமக்கு அருகில் இருப்பவர் திருமங்கைமன்னன். கலியன் பாடாவிடில் திவ்யதேசத்து எம்பெருமான்களின் அழகை உள்ளபடி அனுபவிக்க வழியில்லை. "விஷயப்ரவணரான இவரை சாஸ்திரத்தால் மீட்க ஒண்ணாது, நம் அழகைக் காட்டியே மீட்க வேண்டும் என்று பார்த்து, தன்னழகைத் திவ்யதேசம் தோறும் காட்டிக் கொடுத்தான் எம்பெருமான்" - என்று வியாக்யானச்சக்கரவர்த்தி பெரியவாச்சான்பிள்ளை பணித்தபடி, 'இவ்வாழ்வாருக்காகவே எம்பெருமான்கள் வியக்கத்தக்க ரூபங்களை மேற்கொண்டு திகழ்கின்றனர்' என்று முன்னோர் அனுபவித்து மொழிவர். அர்ச்சாவதார அழகைக் கலியன் பாசுரங்கள் தெற்றெனப் புலப்படுத்தும். "வெண்சங்கம் ஒன்றேந்திய கண்ணா! நின் தனக்கும் குறிப்பாகில் கற்கலாம் கவியின் பொருள்தானே" - என்று பெருமாளையும், கவியின்பத்தை அனுபவிக்க அழைக்கும் பாங்கு பிரமிக்கச் செய்யும்.

எம்பெருமான் திருமங்கையாழ்வாரைக் குறித்துப் பல கேள்விகளை மடிபிடித்துக் கேட்க, ஆழ்வாரது பதில்களில் பாகவத வைபவமாகிற பரமரஹஸ்யம் வெளிப்படுகையால் இதை மடிபிடி ரஹஸ்யம் என்று கூறுவர். (வார்த்தாமாலையின் உட்பகுதி இது.)

திருநறையூர் நம்பி விஷயமாகக் கலியன் நூறு பாசுரங்களை அருளிச் செய்து இறுதியில் "நல்லமாமலர்ச்சேவடி சென்னியிற் சூடியும் தொழுதுமெழுந்தாடியும்" என்று பாடியதைக் கேட்ட நறையூர் நின்ற நம்பி, " இவர் நம் திருவடியின் (காலின்) சிறப்பைப் பாடியதால் நம்மைக் கால்வாசி தான் அறிந்தவராக இருக்கிறார், இவர் நம்மைப் பூரணமாக அனுபவிக்கப் பண்ண வேணும்!" என்று எண்ணி, "ஆழ்வீர்! திருச்சேறைக்கு வாரும், நீர் விரும்பியவாறு நமது நல்லமா மலர்ச் சேவடியை உம் சென்னியில் சூட்டுவோம்" என்று பகவான் அருளிச்செய்தான். ஆழ்வாரும் திருச்சேறைக்கு வந்தார். அங்கு வீற்றிருந்த எம்பெருமான் மாமதலைப்பிரான் இவ்வாழ்வார் தலைமேல் அசைந்தாடும் பூமாலையில் புனுகுத் தைலத்தைத் தடவினாற்போல் தன் திருவடிகளை வைக்க முனைந்தான்.

"நல்ல மாமலர்ச் சேவடி"- என்று நாம் பகவானுக்குத் திருவடிகள் போன்றவர்களான பரம பாகவதர்களைக் கருதியிருக்க, இவன்தன் திருவடிகளைக் கொண்டு நம்தலையில் வைப்பதோ!" என எண்ணி, அத் திருவடிகளைப் புறங்கையால் தடுத்து, "பொதுநின்ற பொன்னங்கழல்" என்று தேவர்களுக்கும், அசுரர்களுக்கும் சமமாக அனுபவிக்கவிருக்கும் உன் திருவடிகளோ என் தலைமேல் இருப்பது? "உன்தாள் தொழுவார்காண்மின் என் தலைமேலாரே" - என்று அருளிச்செய்தார். இதைக்கேட்டு வெட்கமடைந்த எம்பெருமான் கலியனிடம் பலகேள்விகள் கேட்க,



ஒவ்வொரு கேள்விக்கும் கலியன் பதில் கூறுகிறர் அவற்றைக் கண்டு மகிழ்வோம்.

பகவான் - "உமக்கு அந்தர்யாமியாக இருப்பது நாமல்லவா?"

கலியன் - "எம்பெருமான் தாள தொழுவார் எப்பொழுதும் என் மனத்தே இருக்கின்ருரே' ' என்று என் உள்ளத்தில் அந்தர்யாமியாக இருப்பது நீர் அல்ல - உமது அடியார்களே"

பகவான் - "அப்படியிருந்தாலும் உமக்கு எளியனான அர்ச்சாவதாரமாய் குலதெய்வமாக இருந்தோமே!"

கலியன் - "கடல்மல்லைத் தலைசயனத்துறைவாரைக் கொணடாடும நெருசுடையார் அவர் எஙகள குலதெயவமே" - எனறு எனக்குக் குலதெயவம் நீர் அல்ல - உமது புகழ்பாடும அடியாரகளே!

பகவான் - "நீர் கொண்டாடும் அடியாரகள் எஙகே இருககிறர கள் என்று பாரததீரா? இவ்விருள்தருமாஞாலததில் இருக்கும் அவர்களைக் கொண்டாடுகிறீரே?"

கலியன் - "போதோடு புனல் தூவும் புண்ணியரே விண்ணவரில் பொலிகின்ருரே" - என்று இவ்விருள்தருமா ஞாலத்திலிருந்தும் உனக்கு ஆராதனம் செய்பவர்கள் நித்ய சூரிகளைவிட உயர்ந்தவர்கள"

பகவான் - "கண களாரள வும நினறு கணணமஙகையுள் கணடு கொணடேனை" எனறு நீர சொன்னவாறு உமது கண் களுககும் நெஞசிறகும் உணவ ளிகக நாம் வேணடுமே!"

கலியன் - "வண்சேறை எம்பெருமான் அடியாரதமமைக கண்டேனுக்கிது காணீர்! என்னெஞ்சும், கண்ணிணையும் களிககுமாறே" என்று என் கண்ணுக்கும், நெஞ்சுக்கும உணவாக இருப்பது நீ அல்ல - உன் அடியார்களே!"

பகவான் - 'ஆனாலும் ஸர்வ கநத: என்னும்படி எல்லா நறுமணஙகளையும், நற்சுவைகளையும் உடையவன் பரமாத்மாவான நாமே உமககு உறுதியளிக்கும் அமுதபானமாக இருப்பதும் நாமல்லவா!"

கலியன் - "எம்பெருமான் தாளை நாளும் சிந்திப்பார்க்கு என் உள்ளம் தேனூறி எப்பொழுதும் தித்திக்குமே" என்று எனக்கு அமுதபானமாக இருப்பன் நீ அல்ல, உன் திருவடிகளைச் சிந்திக்கும் அடியார்களே!"

பகவான் - "அப்படியானாலும் உமக்கு உபாயமாகவும், உபேயமாகவும் இருப்பது நாமல்லவா!"

கலியன் - "பேராளன் பேரோதும் பெரியோரை ஒருகாலும் பிரிகிலேனே" என்று எனக்கு எப்போதும் உத்தேஸ்யர்கள உனது பேரோதும் அடியார்களே, நீ அல்ல!



# நெறிமுறைகள்

யாவர்க்கு மாம் இறைவற்கொரு பச்சிலை
யாவர்க்கு மாம் பசுவுக்கொரு வாயுறை
யாவர்க்கு மாம் உண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்கு மாம் பிறர்க்கின்னுரை தானே.

--திருமூலர்.

வில்வம், துளசி, அருகம்புல் போன்ற ஏதேனும் ஒரு பச்சிலையால் அர்ச்சனை செய்து தினமும் முதலில் அந்த இறைவனை வணங்க வேண்டும். பின்பு நமக்குப் பால் கொடுக்கும் பசுவிற்கு ஒரு வாய் உணவு (அகத்திக்கீரை அல்லது பச்சரிசி) கொடுக்க வேண்டும். ஒரு கைப்பிடி அளவாவது நாம் உண்ணும் சமயத்திற்கு முன் அந்த உணவை தானமாக பிறருக்கு தர்மம் செய்யவேண்டும். அப்படியில்லையெனில் பிறஜீவராசிகளுக்கு (பறவைகளில் காகம் போன்று) வைக்கவேண்டும். பிறகு காலை முதல் இரவு வரை அனைவரிடத்தும் அனைத்திற்கும் மேலாக இனிய மொழியிலேயே பேசி (சுடுசொல், கடும்மொழி தவிர்த்து) பழகுதல் வேண்டும்.

இப்படி ஒவ்வொருவரும் அன்ருட வாழ்வில் பின்பறறினால் இவ்வுலகில், இவ்வுலகமே அனைவர்களுக்கும் சொர்க்க பூமியாக இருக்குமே!

தகவல்: திருமதி. கமலவேணி தனபதி

# பட்டினத்தாரின் சிந்தனைகள்

திரு. ச. முத்துச்சாமி
புத்தூர்.

## முன்னுரை :

நம் உடல் என்பது ஐந்து பூதங்களால் ஆனது. நிலம், நீர், நெருப்பு, காற்று, வெளி என்ற இந்த ஐந்து பூதங்களும் நீங்கி விட்டால் பிறகு உடல் இல்லாது போய் விடுகிறது. அப்போது ஐந்து பூதங்களின் தனிச்செயலாகிய தன்மாத்திரை எனப்படும் மணம், சுவை, ஒளி, ஊறு, ஓசை ஆகியவையும் ஒடுங்கி விடுகின்றன. இதனால் உடல் என்பதைக் காண முடியாது. இவ்வாறு உடல் அழிந்து வெட்ட வெளியாகின்றது. மனிதன் தன்னையே முழுவதும் அறிந்து கொள்ள முயலுகின்ற பொழுது அம்முயற்சிக்கு ஆத்ம சாதனம் என்று பெயர். தன்னை ஓரளவு அறிந்தவனாகவும், அறியாதவனாகவும் மனிதன் இருக்கின்றான். மனிதனுடைய அமைப்பில் பஞ்ச பூதங்கள் அவைகளினுடைய தன்மாத்திரைகள், பிறகு அவைகளைப் புலப்படுத்துதற்கென்று அமைந்துள்ள மனம், சித்து, புத்தி, அகங்காரம் இவைகளை எல்லாம் ஒதுக்கிவிட்டால் போக்குவரவற்று எஞ்சியிருப்பது பேரறிவு. இப்பேரறிவு நிலையில் இருப்பவர்களே மெய் ஞானிகள்.

## பட்டினத்தார்

பேரறிவு நிலையில் உள்ள மெய்ஞானிகளில் ஒருவர் திருவெண்காடு பட்டினத்தார். அவருடைய ஆன்மீகம் மற்றும் சமுதாயச் சிந்தனைகளை விளக்குவதே இக்கட்டுரை. பட்டினத்தடிகள் காஞ்சிபுரத்தில் எழுந்தருளியுள்ள ஏகம்பரநாதரை துதித்துப் பாடியுள்ள பாடல்கள் 43. அவற்றில் ஒழுக்கமும் இனப்பற்றும் இன்றி வாழ்கின்றவர்களை சாடுவதன் மூலம் ஆன்மீகப் பாதையில் எப்படிச் செல்ல வேண்டும் என்பதை உணர்த்துகிறார்.

மனிதர்களில் பலர் வீண்வம்புக்குச் செல்பவர்கள். வம்பும் வழக்கும் மேற்கொள்பவர்கள் தீமைக்குத் துணை நிற்பார்கள். உழைத்துத் தேடிய செல்வத்தையெல்லாம் சாகும்வரை மங்கையர்க்குக் கொடுத்து மயங்கிக் கிடப்பார்கள். இப்படிப்பட்ட மனிதர்கள் ஏன் பிறந்தார்கள் என்பதை,

"வாதுக்குச் சண்டைக்குப் போவார்
வருவார் வழக்குரைப்பார்
தீதுக்கும் உதவியும் செய்திடுவார்
தினந்தேடியொன்றும்
மாதுக்களித்து மயங்கிடுவார்
விதிமாளுமட்டும்
ஏதுக்கிவர் பிறந்தார் இறைவா
கச்சி ஏகம்பனே"

என்று பாடுகிறார்.

இன்னும் பலரின வாழ்க்கையைப் படம்பிடித்துக் காட்டுகின்றார். ஓய்வு ஒழிவு இல்லாமல் பொய் சொல்வார்கள். நல்லவர்களைப் பழித்து நிந்தனை செய்வார்கள். பெற்றதாயை மனம் நோகும்படி செய்வர். அவர்கள் செய்யும் சதிகளோ ஆயிரம் ஆயிரம்! நல்வழி காட்டும் சாத்திரங்களை ஊன்றிப் படித்து ஆராயமாட்டார்கள். பிறருக்கு எள்ளளவும் உதவமாட்டார்கள். தம்மை நாடி வந்து கையேந்துகின்றவர்களுக்கு ஏதும் கொடுக்கமாட்டார்கள். இப்படிப் பட்டவர்களைப் பார்த்து இறைவனிடம்,

"ஓயாமல் பொய் சொல்வர் நல்லோரை
நிந்திப்பர் உற்றுப்பெற்ற
தாயாரைவைவர் சதியாயிரஞ்
செய்வர் சாத்திரங்கள்
ஆயார் பிறர்க்குபகாரஞ் செய்யார்
தமை அண்டினர்க்கொன்று
ஈயார் இருந்தென்ன போயென்ன
கச்சி ஏகம்பனே"

என்று பாடுகிறார்.

சிவனைப் பற்றிய கதைகளைக் கற்க மாட்டார்கள் சான்றோர்களிடம் கனவிலும் உண்மை பேசமாட்டார்கள். பசி என்று துடிப்பவருக்கு உணவு தரமாட்டார்கள். குருவார்த்தையின் படி நடக்கமாட்டார்கள். தர்மத்தைப் பற்றி எண்ணிக்கூட பார்க்க மாட்டார்கள். சிவனின் நாமங்களை நினைக்கவும் மாட்டார்கள். இப்படிப்பட்டவர்கள் வாழ்ந்தால் என்ன? மடிந்தால் என்ன? என்பதை,

"கல்லார் சிவகதை நல்லோர்
தமக்குக் கனவிலும் மெய்
சொல்லார் பசித்தவர்க்கன்னங்
கொடார் குருசொன்னபடி
நில்லார் அறத்தை நினையார் நின்
நாமம் நினைவில் சற்றும்
இல்லார் இருந்தென் இறந்தென்
புகல் கச்சி ஏகம்பனே

என்று பாடுகிறார்.

## மண், பெண், பொன், ஆசை

உலகில் மாந்தர்க்கு வரும் அல்லல்கள் யாவும், மண் பெண், பொன் இம்மூன்றன் காரணமாகவே எழுகின்றன. இவ ஆசைகளைட்

போக்கி இறைவன்மீது உண்மையான அன்பு செலுதத வேண்டும். அதுவே மாந்தர்கடைத்தேறும் உண்மையான வழி என்பதை,

"பொன்னை நினைந்து வெகுவாகத்
தேடுவர் பூவையன்னாள்
தன்னை நினைந்து வெகுவாய்
உருகுவர் தாரணியில்
உன்னை நினைந்திங்கு உனைப்பூசி
யாத உலுத்தரெல்லாம்
என்னை இருந்து கண்டாய்
இறைவா கச்சி ஏகம்பனே"

என்று பாடுகிறார்.

## அஞ்செழுத்து ஓதுதல்

பொய், கோபம் இவற்றை ஒழித்து புலால் உண்ணுதலை விட்டு நல் அறங்களைச் செய்து எப்பொழுதும் பஞ்சாட்சர மந்திரமாகிய ஓம் நமசிவாய என்னும் அஞ்செழுத்தை மனமானது ஓதிக் கொண்டிருக்க வேண்டும். அப்படி ஓதாமல் இருக்கும் உள்ளத்தால் மனதால் என்ன பயன் என்று சாடுகிறார்.

"பொய்யை ஒழியாய் புலாலை
விடாய் காளத்தி
ஐயரை எண்ணாய் அறம்
செய்யாய் வெய்ய
சினமே ஒழியாய் தரு-
வெழுத்தைந்து ஓதாய்
மனமே உனக்கென்ன மாண்பு.
கலலாப் பிழையும் கருதாப்-
பிழையும் கசிந்துருகி
நில்லாப் பிழையும் நினையாப்-
பிழையும் நின்அஞ்செழுத்தைச்
சொல்லாப் பிழையும் துதியரப்
பிழையும் தொழாப் பிழையும்
எல்லாப் பிழையும் பொறுத்தருள்வாய்
கச்சி ஏகம்பனே"

என்கிறார். அஞ்செழுத்தை மனதிலே ஓதி எம்பெருமானாகிய சிவபெருமானை வணங்க வேண்டும் என்பதை இப்பாடலின் மூலம் வலியுறுத்துகிறார்.

## தெய்வம் உண்டு

தெய்வம் உண்டு என்ற நம்பிக்கையுடன் இருக்க வேண்டும் என்பதை,

"ஒன்றென்றிரு! தெய்வம் உண்டென்
றிரு உயர்செல்வம் எல்லாம்
அன்றென்றிரு! பசித்தோர் முகம்பார்
நல்லறமும்நட்பும்
நன்றென்றிரு நடுநீங்காமலே
நமக்கு கிட்டபடி
என்றென்றிரு மனமே உனக்கே
உபதேசம் இதுவே"

என்று பாடுகிறார்.

## மன ஒருமைப்பாடு

மனம் ஒரு குரங்கு என்றும் 'வன்மனப் பேய்க்குரங்கு' என்றும் அறிஞர்கள் அதனைப் பலவாறு பகர்வர். மனத்தை அடக்குதல் மிகவும் அருமை. அவ்வருமையை இறைவன் திருவருளால் எளிதில் அடைய முடியம். மனம் ஒன்றி செய்யாத பூசையால் என்ன பயன என்பதை,

"கைஒன்று செய்ய விழிஒன்று நாட
கருத்து ஒன்று எண்ண
பொய்ஒன்று வஞ்சகநாஒன்று பேச
புலால் கமழும்
மெய் ஒன்றுசார செவி ஒன்று
கேட்க விரும்பும் யான்
செய்கின்ற பூசை எவ்வாறு
கொள்வாய் வினைதீர்த்தவனே"

என்று பாடுகிறார்.

## பிறப்பு-இறப்பு

பொருள்வழி இன்பத்தைத் தேடுதலைப் புறக்கணித்து விட்டால் சாவுகாரணமாக அதை இழக்க நேரிடுமே என்று அச்சமும் மறைந்துவிடுகிறது. இத்தகைய அமைதியைப் பெற றவனுக்கு மரண பயம் கிடையாது. பிறந்தவரெல்லாம் இறக்கத்தான் வேண்டும் என்று நாம் அறிந்த போதிலும் இரண்டையும் சமமாகக் கருதும் பக்குவம் நமக்கில்லை. நம் போன்றவர்களைக் கண்டுதான்,

"செத்துக் கிடக்கும் பிணந்தனின்-
மேல் இனிச்சாகும் பிணங்கிடந்து
கத்துங் கணககென்னகான்
கச்சி ஏகம்பனே

என்று பாடுகிறார்.

## இறைவனடி நிலையானது

ஊரார், உற்றார், உறவினர், பெண்டிர், பிள்ளைகள் யாவரும் நமக்கு நிலையானவை அல்ல. இறைவன் அருளே நிலையானது என்பதை,

"ஊருஞ் சதமல்ல உற்றார்
சதமல்ல உற்றுப்பெற்ற
பேருஞ் சதமல்ல பெண்டிர்
சதமல்ல பிள்ளைகளுஞ்
சீருஞ் சதமல்ல செல்வஞ்
சதமல்ல தேசத்திலே
யாருஞ் சதமல்ல நின்தாள்
சதம் கச்சி ஏகம்பனே"

என்று வேண்டுகிறார்.

## இறைவனடியாரிடத்து அன்பு

தொண்டர்தம் பெருமை சொல்லவும் அரிதோ என்ப தற்கேற்ப அடியார்களிடத்தில் இறைவன் அடங்கியிருக்கின்றான். எனவே இறைவனுடைய அடியார்களின் புகழைப் பேசுகின்ற மக்கள் மண்ணுலகில் தீமைகள் நெருங்காத நல்ல உடல் நலமும் மெய்வலிமையும் நல்லோர் உறையும் இடமும் பெறுவார்கள என்பதை வலியுறுத்த அடியார்களை வணங்க வேண்டும் என்கிறார்.

"வாளால் மகவரிந்து ஊட்டவல்லேன்
அல்லன் மாதுசொன்ன
சூளால் இளமை துறக்க வல்லேன்
அல்லன் தொண்டு செய்து
நாளாறில் கண்ணிடந்து அப்ப-
வல்லேன் அல்லன்நானிச்சென்று
ஆளாவதுஎப்படியோ திருக்காளத்தி
அப்பருக்கே"

என்று பாடுகிறார்.

## முடிவு :

ஆன்மீகம் என்பது கடவுளை வழிபடுவது மட்டுமல்ல. அன்பு, அருள், ஒழுக்கம், நேர்மை, ஞான நூலறிவு இவை எல்லாமும் சேர்ந்து இறையன்பும் சேர்ந்து நாம் வாழும். வாழ்க்கையே நல்ல வாழ்க்கை என்பது புரியும். பட்டினத்தடிகளின் இச் சிந்தனைகளை நம் சிந்தையில் வைப்போமாக! 

# வேலூர் தோன்றிய வரலாறு

திரு. ஏ. சுந்தரராஜன் - சித்தூர்.

மாலிக் காஃபூர் தன தென்னிந்திய திகவிஜயத்தில் (கி.பி. 1308-1309) திருமலைக் கோயிலைக் கொள்ளையிடவில்லை என்பது மட்டுமே சரித்திரம் அறிந்த செய்தி.

ஆனால -

பொன்னும் பொருளும் நிறைந்த திருமலைகோயிலை விட்டுவிட்டு, மாலிக் காஃபூர் தில்லிக்குத திரும்பியது ஏன்? என்பது பலர அறியாத இரகசியம். அதன மர்மங்கள் வேலூர் எழுநத வரலாற்றில் காணக்கிடக்கின்றன. வேலூர் தெரிந்த பெயர்; தெரியாத பின்னணி விவரங்கள் இதோ:

திருவேங்கடமலைக்குத் தெற்கில் சுமார் 50 கல் தூரத்தில் அமைந்துள்ள சிறு நகரம் சித்தூர். சுமார் 700 ஆண்டுகளுக்கு முன்னர் நல்லியற்கோடன் (நம்பிராஜன வழித் தோன்றல் இவன். நம்பிராஜன் முருகக் கடவுளை மணந்த 'வள்ளி'யின் தந்தை எனவும் கூறப்படுகிறது. தன் நல்ல இயல்பிலிருந்து மாறாதவன் எனவே நல்லியற்கோடன் என்று காரணப்பெயராகக் கருதப்படுகிறது. "நலலியற்கோடன்.... சிற்றினம் சேரான" என்னும பாடல் வரியினால் தெளிவாகிறது.) என்னும் பெயரையுடைய ஒரு தமிழ் மன்னன் அவ்வூரில் தனிச் சிறப்புடன் நல்லாட்சி நடத்தி வந்தான். (அவனுடைய கோட்டையும் அரணமனையும் இன்று அரசாங்க தலைமை மருத்துவ மனையாககப்பட்டுள்ளது.)

ஒருநாள பொழுது புலரும் முன்னர அவ்வரசன் ஒரு கனவு கண்டு, கண்விழித்து எழுந்தான். கனவில் சித்தூரைத் தாக்க துருக்கியர் பெரும் குதிரைப் படையுடன் வருவதாக கண்டான்; தன்னையுமறியாமல், "முருகா! என் செய்வேன்" என்று கதறினான். கனவில் முருகன் தோன்றவில்லை. ஓர் அசரீர வாணி (தெய்வீகக் குரல்) ஒலித்தது :

"அஞ்சற்க அருகிலுள்ள அக்குளத்துத் தாமரை மலர்களைக் கொய்து, பகைவர் மேல் எறிக!" என்றறிவித்தது.

உடனே கண்விழித்து எழுந்தான் நலலியற்கோடன். கனவில் தான் கண்ட காட்சியைத் தன் மனைவியிடமும் மந்திரியிடமும் விவரித்துச் சொன்னான. அமைச்சர் ஒற்றர் படையினை எல்லா திசையிலும் மணி ஒலிக்கச் செய்து, அக்கம்பக்கங்களில் ஏதேனும் ஆபத்துக்கள் நேர இருக்கிறதா என்று தெரிவிக்கச் சொன்னார.

ஒற்றர படைத்தலைவன் அரசனை அணுகி, "அரசே, நம் தென்கிழககு எல்லையில் துருக்கிய குதிரைப் படையினர் முகாமிட்டுத் தங்கியுள்ளனர். பொழுது விடிந்ததும் அவர்கள் எநநேரமும் நம் கோட்டையைத் தாக்கக்கூடும். அவர்களை எதிர்த்துப் போராடும் படைவலிமை நம்மிடம் இல்லை எனத்தோன்றுகிறது....." என்றான்.

"பகைவரின் கூடாரங்களுக்கு அருகில் ஏதேனும் ஒரு தாமரைத் தடாகம் உள்ளதா?" என்று அமைச்சர் ஒற்றர்படைத்தலைவனை வினவினார்.

"செந்தாமரைக் குளம் ஒன்று அருகில் உள்ளது" என்று ஒற்றன் தெரிவித்தான். அவனை அனுப்பிவிட்டு, அமைச்சர் பிரதான சேனாதிபதியை உடனே வரும்படி சொல்லியனுப்பினார்.

படைத்தலைவன் அமைச்சரிடம் வந்து வணக்கம் தெரிவித்தான். அமைச்சர் அவனுக்கு இட்டக் கட்டளை:

"நம் தென்கிழக்கு எல்லையில் துருக்கியர் படை குழுமியுள்ளது. பொழுது புலரும் முன்னர் அங்குச் சென்று, அவண் காணப்படும் தாமரைக் குளத்து அலரா மலர்களைக் கொய்து, பகைவர்மேல் எறிந்துவிட்டு, திரும்பி வருக."

இருள் கவ்விய வைகறையாமத்திலேயே, தீவட்டிகளை ஏந்திக் கொண்டு பத்து வீரர்களுடன், படைத்தலைவன் சித்தூரின் தென்கிழக்கு எல்லைக்கு விரைந்து ஓடிச் சென்றான். அங்கு ஓர் அழகிய தாமரைத் தடாகம் காணப்பட்டது. அதன் கரையில் குதிரைகளும் கூடாரங்களும் காணப்பட்டன.

அமைச்சரின் ஆணைப்படி சற்றும் ஓசைப்படுத்தாமல் குளத்தில் இறங்கி, அம்மலர்களைக்

கொய்தனர் சித்தூர் மறவர்கள். பகைவரின் கூடாரங்களை நோக்கி அம்மலர்களை வீசி எறிந்தனர்.

உடனே ஓர் அதிசயம் நிகழ்ந்தது. அக்கூம்பியத் தாமரை மலர்கள் கூர்வேல்களாக மாறி பகைவர்களைத் தாக்கின. விழித்தெழுந்த துருக்கியர் படை சிதறி ஓடியது. மாலிக்காஃபூரும் மற்றும் சிலருமே தப்பி மறைந்தனர். பலர் மடிந்து வீழ்ந்தனர்.

அவ்வழியே அப்பொழுது சென்று கொண்டிருந்த ஒரு புலவர், ஆதங்கோட்டனார் எனப்படுபவர், அந்த அரிய காட்சியைக் கண்டார். உடனே சித்தூர் மறவர்களைப் பாராட்டி ஒரு பாடல் பாடினார். மேலும், "இஃது எந்த மன்னனின் எல்லை? தெய்வத்தன்மையுடைய நீவீர் யாருடைய படைஞர்" என்று விவரம் கேட்டார் ஆதங்கோட்டனார்.

"சித்தூர் மன்னன் நல்லியற்கோடனின் எல்லை இஃது. யாம் அவர் பணித்த காவல் படைஞர்" என்றான் படைத் தலைவன்.

"தெய்வ வலிமை சான்ற நும் அரசனைக் காண விழைகிறேன். அவரிடம் என்னையும் அழைத்துச் செல்க" என்று அப்புலவர் வேண்டி நின்றார்.

சித்தூர் அடைந்து ஆதங்கோட்டனார், தான் கண்ட அரிய அந்நிகழ்ச்சியை - கூம்பிய மலர்கள் கூர்வேலாக மாறி, பகைஞரைத் தாக்கி விரட்டிய அபூர்வக் காட்சியை மன்னனிடம் பாடல் வடிவில் எழுதி, அப்பட்டோலையைச் சமர்ப்பித்தார்.

பாடலைப் படித்ததும் பரவசமடைந்த மன்னன் நல்லியற்கோடன், தன் கழுத்தில் அணிந்திருந்த முத்துமாலையைக் கழற்றிப் புலவருக்குப் பரிசளிக்க விரும்பினார். முத்துமாலையைக் கழற்ற, மணிமுடியினைக் கழற்ற வேண்டும். மேலும் "அரசே தங்கள் ஒழுக்கத்தின் விழுப்பமே இத்தெய்வச் செயல் எழக் காரணமாய் உள்ளது. எனக்குப் பரிசளிப்பதை விட, இந்நிகழ்ச்சியை எல்லோரும் நினைவுகூரும் வகையில் ஒரு பெரிய பரிசு கேட்க விரும்புகிறேன்" என்றார் புலவர்.

"மறக் கொணு பரிசை மகிழ்ச்சியுடன் தர விரும்புகிறேன். என்ன வேண்டுமோ தாங்கள் தயக்கமின்றி கேட்கலாம். உறுதியாக தருகிறேன்" என்றான் நல்லியற்கோடன்.

"கூம்பிய மலர்கள் கூர்வேல்களாக கிளைத்தெழுந்து, பகைவரைத் தாக்கி, விரட்டிய . அதிசய நிகழ்ச்சியை என்றென்றும் நினைவில் நிறுத்தும் வண்ணம், வேலெழுந்த இடத்தில் ஒரு கோட்டையையும் கட்டி சிற்றூரும் அமைத்து, "வேலூர்" என்று அதற்குப் பெயரிடுக. இதுவே யான் வேண்டும் பெரும் பரிசில்" என்றார் ஆதங்கோட்டனார்.

மன்னனும் இசைந்து, அவ்வாறே ஒரு கோட்டையும் கட்டி சிற்றூரும் அமைத்தான்.

இவ் வரலாற்றினைச் சிறப்பிக்க எழுந்த ஊரே இன்றைய வேலூர். நல்லியற்கோடனின் கோட்டையைத் தன்னகம் கொண்டுள்ளது; சித்தூரின் புகழினை வேலூர் விளம்பா நிற்கின்றது.

திருமலைக்குக் காவல் கோட்டையாக வேலூர் விளங்கியது மற்றொரு பெருமை. 

## சன் மார்க்கம்

சன் மார்க்கத்திற்கு, பிடில் மத்தளம் முதலான விநோதங்கள் வேண்டியதில்லை. மனநெகிழ்ச்சியோடு தோத்திரம் செய்வதுதான் வழிபாடு.

—வள்ளலார்

## பிரம்மம்

இந்த உலகம் எதிலிருந்து பிறந்து வளர்கிறதோ அதுவேதான் பிரம்மம். , நிலைத்து இருப்பது, பிறகு அழிந்து போவது என்ற எல்லாவற்றையும் நடத்தும் சக்தியே பிரம்மம் எனப்படுவது.

—பிரம்ம சூத்திரம்

## கோழை

நீதியை உணர்ந்தும், அதை நிலை நாட்டத் தவறியவன் கோழை.

—ஷிண்டோ

தொகுத்தவர்: கமலா மாரியப்பன் - கோவை.



# கர்நாடக சங்கீத மும்மூர்த்திகள்

திரு. வி.எஸ். ஸ்ரீனிவாசன் - தஞ்சாவூர்.

நம்முடைய சங்கீதததுக்கு நிர்ணயமான உருவமும் நிரந தரமான ஸதானமும் ஏற் படுத்திக்கொடுத்த பெரியோர் கள் ஐவர். அவர்க ளில் ஸ்ரீபுரந்தரதாஸர் நீங்க லாக ஸ்ரீ தியாகராஜர், ஸ்ரீமுத் துஸ்வாமி தீக்ஷிதர், ஸ்ரீஸ்யா மாசாஸ்திரிகள், ஸ்ரீஸ்வாதித்தி ருநாள் மகாராஜா ஆகிய நால் வரும் ஒரே காலத்தில் வாழ்ந் தவர்கள். அவர்களில் மும்மூரத் திகள என்று சிறப்பிக்கப்படு கிற முதல் மூன்று பெரியோர் களும் ஒரே ஊரில், பண்ணின் இன்மொழி கேட்கும் பரமனா கிய தியாகேசன் எழுந்தருளி யுள்ள திருவாரூரில் ஜனித்த வர்கள் என்பது கலை உலகின் அதிசயங்களில் ஒன்ருகும்.

இம்மகான்கள் இயற்றியுள்ள கிருதிகளும், ஏற்படுத்தியுள்ள சம்பிரதாயங்களும் நமது சங் கீத பரம்பரையின் பொக்கிஷங் களாக விளங்குகின்றன. இவர் கள் மூவரும் சிறந்த பக்தர் கள். இசைக்காகவே தங்கள் வாழ்வை அர்ப்பணம் செய்த வர்கள். சங்கீதத்தை பக்திக் கென்றே பயன்படுத்தியவர்கள். ஆண்டவனைப் பாடிய வாயால் அரசனைப் பாடமறுத்து, வறு மையைத் தோழனாகக் கொண் டவர்கள். இவர்கள் ஒருவ ரோடு ஒருவர் பழகிச் சிறந்த நண்பர்களாகவும் விளங்கினார் கள் என்று கர்ணபரம்பரையா கத் தெரியவருகிறது.

ஸ்ரீதியாகராஜ ஸ்வாமி கள் திருவையாறு தெருக்களில் பஜனை செய்து செல்லும் போது தீக்ஷிதரும், ஸ்யாமா சாஸ்திரிகளும் உடன் சென்று அனுபவிப்பார்கள் என்று தாம் கேட்டிருப்பதாக டாக்டர் ஸ்ரீஉ.வே. சாமிநாத ஐயரவர் கள் எழுதியிருக்கிருர்கள். தூய வாழ்க்கையும் உயர்ந்த மனப் பண்பும் கொண்ட இப்பெரி



யோர்கள், தங்கள் ஜீவிய காலத்திலேயே சிறந்த புகழ் அடைந்தார்கள். அவதார புருஷர்களாக மதிக்கப்பட்டார்கள். இவர்கள் பல அற்புதங்களை நிகழ்த்தியதாகவும் கதைகள் வழங்குகின்றன. மக்கள் இவர்களிடம் கொண்டுள்ள மதிப்புக்குச் சான்ருக அக்கதைகளைக் கருதலாம்.

சங்கீத உலகம் இவர்களுக்கு எவ்வளவு கடமைப்பட்டிருக்கிறது என்பதை எடுத்துக்கூறத் தேவையில்லை. "மூவரும் கர்நாடக சங்கீதத்துக்கு உயிரும், உடலும், உள்ளமும் போன்றவர்கள்" என்று சுவாமி சுத்தானந்த பாரதியார் தாம் எழுதியுள்ள தீக்ஷிதர் சரித்திரத்தில் வெகு அழகாகக் குறிப்பிடுகிருர்.

## ஸ்ரீ தியாகராஜர்

திருவாரூரில் பிறந்து திருவையாற்றில் வளர்ந்து நாதோபாஸனையில் ஈடுபட்டவர் ஸ்ரீ தியாகராஜர். இசையின் மூலமாக பகவான் ராமனை வழிபட்டவர். எந்தக் கலையும் எவருடைய ஆதரவும் இருந்தாலும் கை தூக்கிவிடமுடியாது. ஆனால் பக்தி அம்சம் அதில் தலை தூக்கியிருந்தால் அந்தக் கலைக்கு அழிவே கிடையாது. இதை நிரூபிக்க தியாகையர் அவர்களின் கீர்த்தனைகளே போதும். அவரை ஒரு அவதாரம் என்றே கருதுகிருர்கள். அவருடைய சமாதியில் வருஷம் தோறும் ஆராதனை நடத்தி எவ்வளவோ சங்கீத வித்வான்கள் வழிபட்டு வருகிருர்கள்.

ஸ்ரீ தியாகராஜரின் பாட்டனார் கிரிராஜர் தஞ்சை மாவட்ட மன்னன் சரபோஜியிடம் சங்கீத விற்பன்னராக விளங்கியவர். இவர் தாயார் ராமபிரும்மம் - சிறந்த ராம பக்தர். தகப்பனார் இறந்த பின்பு பாகப்பிரிவினை நடந்தது. மூன்ருவது பிள்ளையான தியாகையர் தகப்பனார் பூஜித்த ராம விக்ரத்தை மட்டும் தன் பங்காகப் பெற்ருர். இவருடைய முதல் குரு வேங்கடராமதாஸன். இவருக்குத் தன் சிஷ்யன் பெரும் புதிராக இருந்தான். ஒருநாள் ஒரு யோகி அவரைச் சந்தித்து தாரக நாம உபதேசம் செய்து அதை 96 கோடி தடவை ஜபிக்கும்படி கூறினார்.

ஸ்ரீ தியாகராஜரை ஆதரிக்க செல்வந்தர்களும் மன்னர்களும் காத்திருந்தனர். ஆனால் அவர் எதையும் அபேக்ஷிக்கவில்லை. தன் சமஸ்தான வித்வானாக தியாகையர் இருக்கவேண்டும் என்று சரபோஜி எவ்வளவோ முயன்ருர். ஆனால் வெற்றிபெறவில்லை. மன்னருக்குக் கடும் கோபம் வந்துவிட்டது. தியாகராஜரை தர்பாருக்குக் கட்டி இழுத்து வரும்படி உத்தரவிட்டான்.

இது செய்தவுடனே சரபோஜியின் வயிற்றில் கடுமையான வலி கண்டது. ராஜவைத்தியர் என்ன செய்தும் குணமாகவில்லை. ஸ்ரீ தியாகராஜரை இழுத்து வரவேண்டாம் என்று உத்திரவு செய்த உடனேயே வலி நின்றுவிட்டது. ஸ்ரீ தியாகையரின் பஞ்சரத்னக் கீர்த்தனைகள் ஒவ்வொன்றும் ஒரு மணி. சுவைத்துப் பார்த்தவர்களுக்குத்தான் அதன் அருமையும் மகிமையும் தெரியும்.

இவர் 2400-க்கு மேற்பட்ட கீர்த்தனைகளைச் செய்திருப்பதாகக் கூறப்படுகிறது. அனுவகிப்போடு பாடப்படும் கீர்த்தனைகள் எண்ணிக்கை இதில் ஒரு சிறிய பகுதிகூட இல்லை. நௌகா சரித்திரம், பிரகலாத பக்த விஜயம் இரண்டும் இவர இயற்றியதுதான்.

1847ஆம் வருஷம் ஜனவரி மாதம் ஆறும் தேதி இவர் ஸ்ரீ ராமனுடைய பாதாரவிந்தத்தை அடைந்தார். இவர் காலம் 1767 முதல் 1847 வரை. கர்நாடக சங்கீத சரித்திரத்தில் மிகச் சிறப்புற்ற காலம்.

## ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர்

இவர் செய்த பாடல்கள் எல்லாம் சம்ஸ்கிருத மொழியில் தான். இவர் கீர்த்தனைகள் ஒவ்வொன்றும் மிக நீண்டவை. கர்நாடக சங்கீதத்தில் இக் கீர்த்தனங்கள் ஒவ்வொன்றும் மாணிக்கம் போன்றவை. தனக்குத் தோன்றியபோது அருள் வாக்காகப் பாடப்பட்டவை இக்கீர்த்தனங்கள். இவர் ஸ்ரீ சுப்பிரமணிய பக்தர். அதனால் தான் எல்லாக் கீர்த்தனைகளிலும் "குகதாஸ" என்ற முத்திரையை வைத்துப்பாடியிருக்கிருர். தஞ்சை நாயக்கர் மன்னர்களிடம் முதல் அமைச்சராக இருந்த ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர், அவர் குமாரர் வேங்கட மஹி, தன் தகப்பனார் ராமஸ்வாமி தீக்ஷிதர் இவர்களிடம் பெற்ற அனுக்கிரகம் காரணமாக இவர் ஒப்பற்ற கீர்த்தனங்களைச் செய்ய முடிந்தது. தகப்பனார் ஸ்ரீ ராஸ்வாமி தீக்ஷிதர் ஒரு பாட்டின் மூலமே தன் மைந்தர் ஒருவருக்கு இழந்த கண்களை அளித்த அற்புதத்தைச் சாதித்தவர். சிறந்த பக்திமான்.

முத்துஸ்வாமி தீக்ஷிதர் தன் சிறுவயதில் சிதம்பரயோகி என்ற மகானிடம் குருகுல வாஸம் செய்தார். காசியில் தங்கி ஹிந்துஸ்தானி சங்கீதத்தையும் முறைப்படிக கற்

ரூர். தன குரு ஆணையின் படி இவர் திருத்தணிக்கு வந்து முருகன் அருள்பெற்றூர்.

இவர் விஜயம் செய்யாத கோயில்களே இல்லை. நவக் கிரகங்களைக் குறித்து இவர் ஒன்பது கீர்த்தனைகளைச் செய் திருக்கிறூர். இவர் செய்துள்ள நாமாவளிக் கீர்த்தனைகள் ஒவ் வொன்றும் ஒவ்வொரு ரத்னங் களாகும்.

இவர் தமது 28வது வய தில் எட்டயபுரத்தில் காலமா னார். இவருடைய சமாதி அங் குள்ளது; வருஷந்தோறும் அங் கும் ஆராதனை அபிஷேகங்கள் நடைபெறுகின்றன. தீக்ஷிதரு டைய கீர்த்தனங்களின் எண் ணிக்கை எவ்வளவு என்பது சரியாகத் தெரியவில்லை. நெல்லை மாவட்டத்திலுள்ள கழுகுமலை ஸ்ரீகந்தனிடம் மிக்க பக்தி கொண்டவர்; பல கீர்த் தனங்களை அப்பெருமான் மீது பாடியுள்ளார்.

## ஸ்ரீஸ்யாமா சாஸ்திரிகள்

இவரைப் பற்றிய வரலாறு கர்ண பரம்பரையாக வந்த தகவல்களைக்கொண்டும் இவர் சங்கீத கவனங்களில் உள்ள விவ ரங்களைக் கொண்டே தெரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது.

இவர் மூதாதையர் விஜயநக ரத்தைச சேர்ந்தவர்கள். தேவி பங்காரு காமாக்ஷியை அர்ச் சித்து வந்தவர்கள். இவர்கள் தஞ்சை - திருவாரூரில் குடி யேறினர். 1763ல் இங்கு தான் ஸ்யாமாசாஸ்திரி பிறந் தார். இவருக்குப் பெற்றேூர் கள் வைத்த பெயர் வேங்கட சுப்பிரமணியம். சியாம கிருஷ் ணன் என்பது செல்லப்பெயர். அது ஸ்யாமா என்று பின்னர் நிலைத்துவிட்டது.

சிறுவனாக இருக்கும்போதே தஞ்சை பங்காரு காமாக்ஷியை அர்ச்சிக்கும பணியை ஏற்கும் வாய்ப்பு இவருக்குக் கிடைத் தது. இவருக்கு சங்கீதத்தில் மிக்க விருப்பம். ஆனால் இவர் குடும்பத்தினர் இதை ஆதரிக் கவில்லை. இவர் தாய்வழி மாமா ஒருவர் இவரது சங்கீத ஞானத்தைக் கண்டு பொறாமை கொண்டு இவரை கொடுமைப்ப டுத்த ஆரம்பித்தார். இவர் ஒரு சந்நியாசியினிடம் சங்கீதம் கற் றூர். தஞ்சை சரபோஜி மன்ன ரிடம் ஆஸ்தானி வித்வானாக இருந்த ஆதியப்பன் என்பரிடம் இவர் ஒப்படைக்கப்பெற்றூர்.

தஞ்சை பங்காரு காமாக்ஷி யின் ஆசிபெற்ற பொப்பிலி கேசவய்யாவுடன் போட்டியிட்டு வெற்றி பெற்றூர். இவரிடம் தோற்ற மற்றெரு வித்வானான அப்புக்குட்டி, நாளடைவில் இவ ருடைய சிஷ்யனாகிவிட்டார்.

இவருக்குத் தான் எப்போது தேக வியோகமாகப் போகிறேூம் என்பது முன்னமே தெரிந்தி ருந்தது. இவர் மனைவி இறந் ததற்கு துக்கம் கேட்கப் பலர் வந்தனர். அவர்களிடம் இவர் "சாக ஐந்து நாள் - செத்து ஆறு நாள்" என்றூர். தன் மனைவி இறந்து ஆறு நாட்கள் ஆயின என்றும், தான் இறக்க இன் னும் ஐந்து நாட்கள் இருக்கின் றன என்பதும் இதற்கு அர்த் தம். இதைக்கேட்டவர்கள் "சாக அஞ்சினாள்" என்று அர்த்தம் எடுத்துக்கொண்டனர்.

அன்றிலிருந்து ஆறு நாட் கள் கழித்து அவர் காலமா னார். இறக்கும் தறுவாயி லும் தஞ்சை பங்காரு காமா க்ஷியின் நாமமே அவர் வாயி லிருந்தது. ஸ்ரீபங்காரு காமா க்ஷியம்மன் இவருக்குப் பிரத் தியக்ஷ தெய்வம். இவர் சுமார் முன்னூறு கீர்த்தனைகள் வரை இயற்றியிருக்கிறூர். ஒவ்வொரு கீர்த்தனையும் முத்துக்கள் என லாம்.

## நினைவு மண்டபம்

திருவாரூரில் அவதரித்து, நாத உபாசனம் செய்த சங்கீத மும்மூர்த்திகளான ஸ்ரீதியாகரா ஜர், ஸ்ரீமுத்துஸ்வாமி தீக்ஷிதர், ஸ்ரீஸ்யாமா சாஸ்த்திரிகள் ஆகி யோருக்கு நினைவு மண்டபம் உள்ளன.

புதுத்தெருவில் ஸ்ரீதியாகரா ஜர் பிறந்த மனையையும், மேட் டுத்தெருவில் ஸ்ரீஸ்யாமா சாஸ் திரிகள் பிறந்த மனையையும், ஸ்ரீதீக்ஷிதர் பிறந்த மனையை யும் வாங்கி அங்கெல் லாம் மண்டபங்கள் எழுப்பியுள் ளனர். இம்மண்டபங்களில் சங் கீத மும்மணிகள் அவரவரு டைய இஷ்ட தெய்வங்களைத் துதிப்பது போல சிலை விக்கி ரக வடிவில் அழகாக அமைக் கப்பட்டுள்ளன. நாடோறும் அவர்களுக்கு அபிஷேகம் ஆரா தனைகள் நடந்து வருகின்றன என்பது முக்கிய குறிப்பாகும்.

இம்மூவரும் பிறந்த திருவா ரூர் எற்கனவே எவ்வளோவோ சிறப்புக்கள் பெற்றிருந்த 'போதி லும், இப்போது மேலும் பல சிறப்புக்கள் பெற்றுள்ளது. ஆம்! திருவையாறு போல இங்கும் சங்கீத விழா வருஷந்தோறும் நடைபெற்று வருவது யாவரும் அறிந்ததே!



(தொடர் கட்டுரை)

# முமுக்ஷுப்படி

திரு. மாருதிதாஸன் - காஞ்சிபுரம்.

## மகாரப் பொருள்

### மூலம் : 66

"மகாரம், இருபத்தஞ்சாமக்ஷரமாய் ஜ்ஞாந வாசியுமாயிருக்கையாலே, ஆத்மாவைச் சொல்லுகிறது."

(இனி பிரணவத்தின் மூன்றும் எழுத்தான மகாரத்தைப் பிள்ளை உலகாசிரியர் விவரித்துச் சொல்லுகிறார்.)

1) மகாரம் எதனைச் சொல்லுகிறது?

மகாரம் ஆன்மாவைச் சொல்லுகிறது. 'ம்' என்னும் எழுத்து வடமொழியில் இருபத்தைந்தாம் எழுத்தாகவும், ஞானத்தைக் குறிக்கும் சொல்லாகவும் இருப்பதனால், மகாரம் ஆன்மாவைச் சொல்லுகிறது.

2) மகாரம் இருபத்தைந்தாம் அக்ஷரம் என்பது எப்படி?

வடமொழியில் 'க' இனம் ஐந்து; 'ச' இனம் ஐந்து; 'ட' இனம் ஐந்து; 'த' இனம் ஐந்து; 'ப' இனம் ஐந்து. இவற்றுள் இருபத்தைந்தாம் அக்ஷரமே மகாரமாகும்.

3) மகாரம் ஆன்மாவைக் குறிக்கிறது என்பது எங்ஙனம் பொருந்தும்?

'க' இனத்தைச் சேர்ந்த ஐந்து எழுத்துக்களால் பூதம் ஐந்தும்; 'ச' இனத்தைச் சேர்ந்த ஐந்து எழுத்துக்களால் கன்மேந்திரியங்கள் ஐந்தும்; 'ட' இனத்தைச் சேர்ந்த ஐந்து எழுத்துக்களால் ஞானேந்திரியங்கள் ஐந்தும்; 'த' இனத்தைச் சேர்ந்த ஐந்து எழுத்துக்களால் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் ஆகிய ஐந்தும்; 'ப' இனத்தைச் சேர்ந்த நான்கு எழுத்துக்களால் மனம், அகங்காரம், மகத்துவம், மூலப்ரிகிருதி ஆகிய நான்கும் இவ்வினத்தைச் சேர்ந்த இருபத்தைந்தாம் அட்சரமாகிய மகாரத்தால் ஆன்மாவும் சொல்லப்படுகிறது.

4) இந்த மகாரம் ஞானத்தைக் குறிக்கும் சொல் என்பது எப்படி?

இந்த மகாரம் "மந - ஜ்ஞாநே" அல்லது "மநு - அவபோதநே" என்னும் பெயர் அடிகளிலிருந்து பிறத்தலின் இந்த மகாரம், ஞானம் என்னும் பொருளைக் குறிக்கிறது.

ஞான சொரூபமுடையவனுமாய், ஞானத்தையே குணமாக உடையவனுமான ஆத்மாவையே மகாரம் குறிக்கிறது என்பதையும் தெளியலாம். முற்றும் உப்புச் சுவை பொருந்திய உப்புக் கட்டியே போன்றுப் பொருள் முற்றும் ஞானசொரூபமாயுள்ளது.

### மூலம் : 67

"இது தான் ஸமஷ்டி வாசகம்".

1) மகாரம் ஏக வசனமாயிருக்கையாலே ஒரே ஆத்மாவைத்தானே குறிக்கும்?

மகாரம் என்பது ஒரே ஆத்மாவைக் குறிப்பதன்று; ஆத்மாக்களின் கூட்டத்தையே குறிப்பதாகும்.

பகவத் கைங்கர்யம் என்பது எல்லா ஆத்மாக்களுக்கும் பொதுவானதாகையால் பத்தர், முத்தர், நித்தியர் ஆகிய மூன்று வகையான ஆத்மக் கூட்டங்களையும் இம்மகாரம் குறிக்கிறது.

### மூலம் : 68

"ஜாத்யேக வசனம்."

1) இம்மகாரம் ஒருமையைக் குறிக்குமா? பன்மையைக் குறிக்குமா?

மகார்ம் ஒருமையே ஆனாலும் இங்குப் பன்மைப் பொருளையே தரும்.

'இந்தக் கடையில் குடைவிற்கப்படும்' என்றால் ஒரு குடை தான் விற்கப்படுமா? இல்லையே! பல குடைகள் விற்கப்படும் என்னும் பொருள் எல்லாரும் அறிந்ததுதானே!

அதுபோலவே மகாரம் (ஆன்மா) இங்கு ஒருமையைக் குறித்தாலும் பன்மைப் பொருளாக ஆத்மாக்களின் கூட்டங்களையே சுட்டும்.

### மூலம் : 69

"இத்தால் ஆத்மா ஜ்ஞாதாவென்று தேஹத்தில் வ்யாவ்ருத்தி சொல்லிற்றாயிற்று."

1) இம்மகாரத்தால் சொல்லப்படுவன யாவை?

ஆன்மா அறிவுடையவன் (ஞாதா) என்றும், ஞானமற்ற உடலைக் காட்டிலும் வேறுபட்

டவன என்றும் மகாரத்தால் சொல்லப்படுகிறது.

ஆத்மாவுக்கு அடிமைத் தனமை (சேஷத்வம), ஜ்ஞாத்ருத் வம் (ஞானமுடைமை), ஆனந்தத் தன்மை (ஆனந்தித்வம்) ஆகிய மூன்று இயல்புகளும் உள்ளன.

எனினும் இங்கு ஆத்மாவின் ஞானத்தன்மையே சொல்லப்படு கிறது.

ஆன்மா ஞானமாகவே இருக் கிறது என்று கூறினால் அவ் வான்மா பஞ்ச பூதத்தாலா கிய சரீரத்திற்கு வேறுபட்டது என்று கூறலாம்.

ஆனால், பரமபதத்தில் ஞான மாகவே இருக்கும் சுத்த சத் துவத்தினாலாகிய சரீரத்திற்கு வேறுபட்டது என்று சொல்ல முடியாது.

சுத்த சத்துவம் ஞானமாய் இருக்கிறதேயன்றி, ஞானமுடை யதாய் இல்லை என்பதனையும் உணரவேண்டும்.

மூலம் : 70

"தேஹத்தில் வ்யாவ்ருத்தி தத்வ சேகரத்திலே சொன் னோம்."

1) ஆன்மா தேகத்திலிருந்து வேறு-பட்டது என்று கூறப்படுவது எவ்-வாறு?

"இந்த உடல் ஆன்மா அன்று; ஆன்மாவின் வேறு பட்டது" என்பதனைப் பலகா ரணங்கள் காட்டித் 'தத்துவ சேகரம்' என்னும் பெயருடைய நூலில் விளக்கியுள்ளதாக ஆசி ரியர் கூறுகின்றார்.

உடலை 'நான்' என்று கூறும் வழக்கம் உலகத்தில் உள்ளது. ஆனாலும் உடல் ஆன்மா ஆகாது.

பத்து ஆண்டுகளுக்கு முன் பிருந்த திருவரங்க விமானம் இன்னும் அப்படியே இருக்கி றது. ஆனால் பத்து ஆண்டுக ளுக்கு முன்பிருந்து இந்த உட லானது இன்றும் அப்படியே இருக்கிறது என்று சொல்லமு டியாது. ஏனெனில், நாளுக்கு நாள் மாறுபடும் இயல்பினை உடையது உடல்.

'பத்து ஆண்டுகளுக்கு முன்பு பார்த்த ஒன்று அப்படியே இருக் கிறது' என்று அறிவதற்கு அன் றும் இன்றும் மாறாத ஒன்று இருந்தே தீர வேண்டுமல்லவா? என்றும் மாறுபடாது இருக்கும் அந்த ஒன்றைத் தான் 'ஆன்மா' என்று சொல்லுகிறோம்.

கண் பார்க்கிறது. கை தொடு கிறது. ஆனால், பார்த்தல் முத லான தொழில்களை அறிவற்ற பொருள்களாகிய மெய் வாய் கண் மூக்கு செவி ஆகியவை செய்தாலும் அவற்றால் அறி யமுடியாது. ஏனெனின் இவை ஐந்தும் மாறுபடும் தன்மையும், அழியும் இயல்பும் உடையன.

எனவே மாறாததும் அழி வற்றதுமாகிய ஒன்றினால்தான் உணர்தல், சுவைத்தல், பார்த் தல், கேட்டல், முகர்தல் முதலிய னவற்றை அறியமுடியும். அந்த ஒன்றைத்தான் ஆன்மா என் கின்றனர்.

எனவே தேகத்திலிருந்து வேறுபட்ட ஒன்றே ஆன்மா என்பது தெளிவு.

மூலம் : 71

"மணத்தையும் ஒளியையும் கொண்டு பூவையும் ரத்நத்தை யும் விரும்புமாபோலே, சேஷ மென்று ஆத்மாவை யாதரிக்கி றது; அல்லாத போது "உயி ரினாற் குறைவிலம்" என்கி றபடியே தியாஜ்யம்; அது தோன்ற சேஷத்வத்தைச் சொல் லிப் பின்னை ஆத்மாவைச் சொல்லுகிறது."

1) தருமமாகிய சேஷத்வத்தை முத-லில் குறிப்பிட்டு விட்டுப் பின்பு தருமியாகிய ஆன்மாவைச் சொல்-லுவதேன்?

மணத்திற்கு இருப்பி டம் என்று மலரையும், ஒளிக்கு இருப்பிடம் என்று இரத்தினத் தையும் மக்கள் விரும்புகின் றனர். அதுபோல, அடிமைச் செயலுக்கு (சேஷத்துவத்திற்கு) ஆன்மா இருப்பிடமாய் இருத் தலால் அறிஞர்கள் ஆன்மாவை ஆதரிக்கின்றனர்.

அடிமைச் செயலுக்கு ஆன்மா இருப்பிடமாக இல்லையென் றால், "உயிரினால் குறைவிலம்" என்னும் நம்மாழ்வாரின் திரு வாய்மொழியின்படியே பகவா னுக்குச் செயல்படாத ஆன்மா வால் யாதொரு பயனுமில்லை யென்று ஆன்மாவையே கைவி டுவர்.

ஆகவே, அறிஞர்களால் சிறப் பிக்கப்படும் இச்சேஷத்துவத் தில் ஆர்வம் தோன்றுதற் பொருட்டே, முதலில் சேஷத் துவத்தைச் சொல்லிப் பின்பு ஆன்மாவைக் குறிப்பிடுகிறார்.

மூலம் : 72

"ஆக, ப்ரணவத்தால் கண்ண புரமொன்றுடையானுக்கு அடி யேன் ஒருவர்க்குரியேனோ" என் கிறபடியே ஜீவபரஸம்பந்தஞ் சொல்லிற்று."

1) அகாரம், உகாரம், மகாரம் ஆகிய மூன்று பதங்களாலாகிய பிரண-வத்தால் வெளியிட்ட பொருளைத் தொகுத்து வரைக.

"கண்ணபுரம் ஒன்றுடையானுக்கு" என்னும் தொடரால் நான்காம் வேற்றுமையைத் தன்னுள் கொண்டுள்ள அகாரத்தின் பொருளை வெளிப்படுத்துகிறார்.

"அடியேன்" என்னும் சொல்லால் பகவத் கைங்கர்யத்துக்கு இருப்பிடமாயுள்ள மகாரத்தின் பொருளை வெளிப்படுத்துகிறார்.

"ஒருவர்க்குரியேனோ" என்னும் தொடரால், பிறருக்கு அடிமைப்பட்டுத் தொழில் செய்தலை விலக்கும் உகாரத்தின் பொருளை வெளிப்படுத்துகிறார்.

திருமங்கையாழ்வார் வாககாகிய இச்சொற்றொடரின்படியே ஆன்மாவுக்கும் பகவானுக்கும் உள்ள சேஷசேஷி பாவமாகிற தொடர்பு வெளிப்படுத்தப்படுகிறது.

2) இத்தொடர் உள்ள திருமங்கையாழ்வார் பாசுரத்தைக் குறிப்பிடுக.

"விடையேழ் அன்று அடர்த்து வெகுண்டு விலங்கலுற
படையால் ஆழிதட்ட பரமன் பரஞ்சோதி
மடையார் நீலம்மல்கும் வயல்சூழ் கண்ணபுரமொன்று
உடையானுக் கடியேன் ஒருவர்க்கு உரியேனோ!"

என்னும் பாசுரம் திருமங்கையாழ்வாரின் 8-9ஆம் திருமொழியில் மூன்றும் பாடலாகக காணப்படுகிறது.

## மூலம் : 73

"இத்தால், 'தாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு' எனறதாயிற்று."

1) இம்மூலத்தால் உணரப்படும் பொருள் யாது?

பிறரிடம் கொள்ளும் தொடர்பினை ஒழித்து, எம்பெருமான் ஒருவனிடமே மனம் நிலைத்திருக்கும் தன்மையை இம்மூலத்தால் உணர்கிறோம்.

'இத்தால்' என்னும் சொல் 'இந்தப்ரணவத்தால்' என்னும் பொருளைத் தரும்.

'தாமரையாள் கேள்வன் ஒருவனையே உணர்வு நோக்கியிருக்கும்' என்னும் தொடரால் பெருமானுக்கும் ஆன்மாவுக்கும் உள்ள தொடர்பு உணர்த்தப்படுகிறது.

எம்பெருமான் அகாரததின் பொருளாக இருக்கிறான். பிராட்டியாருடன் கூடி இருக்கும் எம்பெருமான் சேதனன் செய்யும் தொண்டினையும் ஏற்றுக்கொள்பவனாக இருக்கிறான்.

இதனால் பிராட்டியின் சம்பந்தமும் தேவை என்பதும் உறுதிப்படுகிறது.

இவையே இம்மூலத்தால் உணரப்படும் பொருள்களாகும். மேலும், பிறரிடம் கொள்ளும் தொடர்பினை ஒழித்து எம்பெருமான் ஒருவனிடமே மனம் நிலைத்திருக்கும் தன்மையை 'ஒருவனையே நோக்கும்' என்னும் தொடர் வலியுறுத்துகிறது.

'உணர்வு' என்பது பகவத் கைங்கர்யத்துக்கு இருப்பிடமாய் மகாரததால் சொல்லப்படும் அறிவாகவே (உணர்வாகவே) இருக்கும் ஆன்மாவினைச் சுட்டுகிறது.

2) இத்தொடர் காணப்படும் பாசுரத்தைக் கூறி விளக்குக.

"உணர்வு தாமரையாள் கேள்வன் ஒருவனையே நோக்கும்" என்று பொய்கையாழ்வார் தாம் இயற்றியருளிய முதல் திருவந்தாதியில் குறிப்பிடுகிறார்.

"பெயரும் கருங்கடலே நோக்குமாறு ஒண்பூ
உயரும் கதிரவனே நோக்கும் உயிரும்
தருமனையே நோக்கும்ஒண் தாமரையாள் கேள்வன்
ஒருவனையே நோக்கும் உணர்வு"

67 - முதல் திருவந்தாதி

ஆறானது அலைகளோடு கூடியிருக்கின்ற கடலைநோக்கி நிற்கும். ஒளிமிக்க தாமரை மலர் சூரியனையே நோக்கி நிற்கும். உயிர்களானவை யமதருமனையே நோக்கி நிற்கும்.

அதுபோல, ஞானமே வடிவாகிய சீவான்மா (உணர்வு) ஒளிமிக்க தாமரையில் எழுந்தருளியிருக்கும் பிராட்டியாரின் நாயகனாகிய எம்பெருமான் ஒருவனையே நோக்கி நிற்கும் என்பது இப்பாசுரத்தின் தெளிந்த பொருளாகும்.

பெருமான் ஒருவனை மட்டுமே நோக்கி நிற்கும் ஈசுவர ஞானமே உண்மை ஞானம் எனப்படும்.

'உணர்வு' என்பதற்குப் பெரியவாச்சான் பிள்ளை ஞானம் என்னும் பொருளையே கூறியுள்ளார்.

இந்த 'உணர்வு' என்னும் சொல்லுக்குப் பிள்ளையுலகாசிரியரும் 'ஞானமாகவே இருககும் ஆன்மா' என்னும் பொருளையே கொள்கிறார்.

## மூலம் : 74

"அகாரததாலும், மகாரத்தாலும், ரக்ஷகனையும் ரக்ஷ்யத்தையும் சொல்லிற்று; சதுர்த்

தியாலும், உகாரத்தாலும், ரக்ஷணஹேதுவான ப்ராப்தியையும் பலத்தையும் சொல்லிற்று."

1) **காப்பவன் தன்மையை முக்கியமாகக் கொண்டு ஆசிரியர் விளக்கிக்கூறுவன யாவை?**

பிரணவத்தால் கூறப்படும் நான்கினை இச்சூத்திரம் விளக்கிக் கூறுகிறது. அவையானவன:

அகாரம், காக்கும் கடவுளையும்; மகாரம் காக்கும் கடவுளால் பாதுக்காக்கப்படும் ஆன்மாவையும்; நான்காம் வேற்றுமையுருபு ஆன்மாவைக் காப்பதற்குக் காரணமாகவுள்ள கைங்கர்யத் தொடர்பையும்; உகாரம், 'பெருமானைத் தவிர வேறு யாருக்கும் ஆன்மா அடிமையன்று' என்பதையும், ஆன்மாவானது பகவான் ஒருவனுக்கு மட்டுமே தன்னை அர்பணித்துக் கொள்வதால் பெறுகின்ற பயனையும் சொல்லுகிறது.

இவ்வாறு காக்கும் கடவுள், காக்கப்படும் ஆன்மா, காத்தலுக்குக் காரணமான கைங்கர்யம், காததலின் பயன் ஆகிய நான்கினையும் பிரணவம் விளக்குகிறது என்பதனை இம்மூலத்தால் ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

2) 66. **முதல் 74 வரையுள்ள மூலங்களில் கூறப்படும் செய்திகளைத் தொகுத்து வரைக.**

உகாரத்திற்கு அடுத்த மகாரமானது, இருபத்தைந்தாம் எழுத்தாகவும், ஞானத்துக்கு இருப்பிடமாகவும் உள்ளதனால் ஞானமே குணமாக உடைய ஆன்மாவைப் பற்றிச் சொல்லுகிறது.

ஆன்மாவைச் சொல்லுவதான இம்மகாரம் 'ம்' என்னும் ஒருமைச் சொல்லாக இருந்தாலும் ஆன்மாக்களின் திரளையே தெரிவிக்கிறது.

ஆன்மாவுக்கு அடியவனாயிருத்தல் (சேஷத்வம்), அறிவுடையவனாயிருத்தல் (ஞாத்ருத்வம்) ஞானாவானாய் இருத்தல் (ஞானத்வம்) ஆகிய மூன்று தன்மைகள் இருப்பினும் ஆன்மா ஞானமுடையது என்பதனையே இம்மகாரம் இயம்புகிறது.

ஞானமற்ற தேகத்தைக் காட்டிலும் ஆன்மா வேறுபட்டது என்னும் விளக்கம் தத்துவ சேகரம் என்னும் நூலில் கூறப்பட்டுள்ளது.

மணத்தையும் ஒளியையும் தருவதனாலேயே மலரையும் மணியையும் மக்கள் விரும்புகின்றனர். அதுபோல, பகவானுக்கு அடிமைப்பட்டிருக்கும் காரணம் ஒன்றினால் மட்டுமே ஆன்மாவும் விரும்பப்படுகிறது.

சேஷத்வம் இல்லையானால் ஆன்மாவால் எவ்விதப் பயனும் இல்லை. இந்நிலையில் இந்த ஆன்மா வெறுக்கப்படும் பொருளே!

அடியவனாம் தன்மையை உடைய காரணத்தால் மட்டுமே அடிமை நிலையை முதலிலும், ஆன்மாவை அதற்கடுத்தும் பிரணவம் பேசுகிறது.

ஆக, பிரணவத்தால் "கண்ணபுரம் ஒன்று உடையானுக்கு அடியேன், ஒருவர்க்குரியேனோ", "தாமரையாள் கேள்வன் ஒருவனையே நோக்கும் உணர்வு" எனப்படும் இப்பாசுரங்களின் படி, ஆன்மாவுக்கும் பெருமானுக்கும் உள்ள அடிமை, தலைமை எனப்படும் தொடர்பு (சேஷ சேஷிபாவம்) சொல்லப் படுகிறது.

அகாரம், காப்பவனான பெருமானையும்; மகாரம் காப்பாற்றப்படும் ஆன்மாவையும்; நான்காம் வேற்றுமையுருபு காப்பதற்குக் காரணமான தொடர்பினையும்; உகாரம் காத்தலின் பயனையும் சொல்லுகிறது.

இச்செய்திகளே 66 முதல் 74 வரையுள்ள சூத்திரங்களில் சொல்லப்பட்டுள்ளன.

(பிரணவத்தின் பொருள் முற்றும்.)

(தொடரும்)



<u>தெரிந்து கொள்ளுங்கள் :</u>

## ஒவ்வொரு நிறத்திற்கும் ஒரு சக்தி உண்டு

கருப்பு : மாயா சக்தி அதன் குணம். அறியாமை அதன் குணம்.

நீலம் : கிரியா சக்தி. அருள் அதன் குணம்.

பச்சை : பராசக்தி வடிவம். செழுமையைக் கொணர்வது அதன் குணம்.

சிகப்பு : இச்சையைத் தூண்டும் சக்தி கொண்டது. குதூகலத்தை உண்டாக்குவது அதன் குணம்.

மஞ்சள் : ஞானத்தைத் தோற்றுவிக்கும் சக்தி கொண்டது. தூய்மை அதன் குணம்.

வெண்மை : ஆதிசக்தி. ஊசலாட்டமில்லாத ஒருமை உணர்வே அதன் குணம.

# பிரான் சூட்டிய எண்மாலை

டாக்டர். கே.எஸ். நாராயணன் - திருநெல்வேலி.

பக்திப் பயிரை வளர்த்த ஆழ்வார்கள் கூடவே தமிழ்ப் பயிரையும் வளர்த்தனர். ஒவ்வொரு ஆழ்வாரும் ஒவ்வொரு வழியில் முழுமுதற்கடவுளான ஸ்ரீமந் நாராயணனின் அளப்பரிய பெருமைகளை விவரித்தும் மக்களை இறைவழிப்படுத்தியும் வந்திருக்கின்றனர். சங்க நூல்களும் சிலப்பதிகாரமும் முல்லை நிலத் தெய்வமான திருமாலின் பெருமையை அழகாக விளக்குகின்றன. இளங்கோவடிகள் தனது சிலபபதிகாரத்தில் ஆய்ச்சியர் குரவை என்ற பகுதியில்,

"திருமால் சீர் கேளாத
செவியென்ன செவியே"

"கரியவனைக் காணுத கண்ணென்ன
கண்ணே"

"நாராயணு வென்னா
நாவென்ன நாவே"

என்ற வரிகள் மூலம் கண், காது, நாக்கு யாவும் நாராயணனைக் காண, அவன் பெருமையைக் கேட்க, அவன் புகழ்பாடவே அமையப்பெற்றன என்று ஆணித்தரமாக எடுத்துரைக்கின்ருர். ஆழ்வார்களின் பாடல்களிலும் இக்கருத்து காணக்கிடைக்கிறது. திருமங்கையாழ்வார் தனது பெரிய திருமொழியில்,

"நலந்தருஞ் சொல்லை நான் கண்டு
கொண்டேன் நாராயணு வென்னும்
நாமம்"

என்றும்,

"நாடினேன் நாடி நான் கண்டு
கொண்டேன் நாராயணு வென்னும்
நாமம்"

என்று பாடிப் பரவி 'நீங்களும் அப்பரந்தாமனின் நாமத்தைச் சொல்லி உய்யுங்கள்' எனக் கூறுகிருர்.

தனக்குக கிடைத்த இறை அனுபவம் என்ற மாநிதி பிறருக்கும் கிடைக்க வேண்டும் என்ற நல்லெண்ணம் உடையவர்கள் இவ்வாழ்வார்கள். எல்லாப் பாடல்களிலும் மாயவனிடம் அவர்கள கொண்டிருந்த ஆழ்ந்த காதல் வெளிப்படுகிறது. பெருமாளுக்கு அவர்கள் கட்டளை இட்டிருக்கின்றனர். தன்னை நாயகியாகப் பாவித்து அவனை நாயகனாக வரித்தும் இருக்கின்றனர். 'முதுமையில் இறைவனை ஆராதிக்கலாம். இளமையில் இஷ்டம்போல் இருக்கலாம்' என்ற கருத்து அவர்களுக்கு உடன்பாடில்லை. உடம்பு தளர்ந்தபின் இறைவனை எண்ண இயலாது. எனவே இப்பொழுதே நினை என்று இடித்தும் கூறுகிருர்கள். இதே கருத்தைத்தான்

"முக்காலுக்கேகா முன் முன்னரையில்
வீழா முன்
அக்கால ரைக்கால் கண்டு
அஞ்சாமுன்
விக்கி இருமா முன் மாகாணிக்
கேகா முன்
கச்சி ஒருமாவின் கீழரையின்ருேது"

என்ற பாடலிலும் நாம் காண்கிருேமன்ருே!

பலபாசுரங்கள் வாயிலாக நுண்ணிய பாரமார்த்திகக் கருத்துக்களையும் வலியுறுத்தியிருக்கின்றனர் ஆழ்வார்கள். பாமாலை சூட்டிய ஆழ்வார்களுள் எண்களாலேயே பெருமானுக்கு எண்மாலைகள் சாத்துகிருர் திருமழிசைப்பிரான். முழுமுதற் கடவுள் நாரணனே என்று எண்ணிய அவர் ஐந்து என்ற எண்ணைக் கொண்டு அப்பரந்தாமனுக்கு ஒரு எண் மாலை சூட்டுகிருர் பின்வரும் பாடலில்.

"ஐந்துமைந்து மைந்துமாகி
அல்லவற்றுளாயுமாய்
ஐந்து மூன்று மொன்றுமாகி
நின்ற வாதி தேவனே!
ஐந்துமைந்து மைந்துமாகி
அந்தரத்தணைந்து நின்று
ஐந்துமைந்துமாய் நின்றனை
யாவர் காண வல்லரே"
-திருச்சந்தவிருத்தம்

இப்பாடலில் ஒன்பது இடங்களில் ஐந்து என்ற எண்ணைப் பயன்படுத்தியிருக்கிருர். முதலில் கூறப்பட்ட ஐந்து நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்ற பஞ்ச பூதங்களைக் குறிக்கும். இரண்டாவதாகக் கூறப்பட்ட ஐந்து பஞ்ச ஞானேந்திரியங்களான மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்புலன்களைக் குறிக்கும். மூன்ருவதான ஐந்து பஞ்ச கர்மேந்திரியங்களான நாக்கு, கை, கால், குதம், குறியைக் குறிக்கும். இரண்டாமடியில் வரும் ஐந்து ப்ராண, அபான, வியான உதான, சமான என்ற பஞ்சப் பிராணனைக் குறிக்கும். பிறகு வரும் மூன்று என்பது புத்தி, சித்தம், அகங்காரத்தைக் குறிக்

கும். அந்தாற்போல் வரும் ஒன்று என்பது மனத்தைக் குறிக்கும். ஆக இவ்விரண்டு அடிகளிலும் நம்முள் அடங்கியிருக்கும் இருபத்திநான்கு வகையான தத்துவங்கள் சொல்லப் படுகிறது. (முதலடியில் பதினைந்து, இரண்டாமடியில் ஒன்பது; ஆக மொத்தம் இருபத்தி நான்கு) இவ்வாறு இருபத்தி நான்கு தத்துவங்களாக ஆகி நின்ற முழுமுதற்கடவுளே என முதலில் விளிக்கிறார்.

இனி மூன்றாவது அடியில் மூன்று ஐந்து வருகிறது. அவை பஞ்சசக்திகளையும், பஞ்ச ஞானேந்திரியங்களையும், பஞ்ச கரமேந்திரியங்களையும் குறிக்கின்றன. கடைசி வரியில் வரும் முதல் ஐந்து சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் போன்ற போகங்களையும், இரண்டாவதான ஐந்து போகஸ்தானம் என்ற பிரிவையும், போக உபகரணங்கள் என்ற பிரிவையும், வைகுந்தத்தில் உள்ள தேவர்கள், முனிவர்கள் என்ற இரு பிரிவுகளையும், முக்தர்கள் என்ற பிரிவையும் சேர்த்து ஆன ஐந்து கோடிகளைக் குறிக்கும். ஆக இருபத்தி நான்கு வகையான தத்துவங்களை உள்ளடக்கிய அப்பெருமான் தனக்குக் காட்டி அருளிய திவ்ய மங்கள ஸ்வரூபத்தையும் நித்ய விபூதி யோகத்தையும் கடைசி இரண்டடிகளில் குறிப்பிட்டு "பரமபதத்திலே பொருந்தியுள்ள வாசுதேவா! உன்னை யாரே முழுதும் அறிய வல்லார்" என வியக்கிறார். அவ்வளவும் அறிந்து வைத்திருந்த திருமழிசைப்பிரான் உன்னையாரே முழுவதும் அறிய வல்லார் எனச் சொல்லியிருக்கும்போது மற்றவர்கள் நிலை என்ன என ஊகித்துக் கொள்ளலாம்.

அடுத்து வரும் ஒரு பாசுரத்தில்,

"மூன்று முப்பதாறினோடு ஒரைந்து
மைந்து மைந்துமாய
மூன்று மூர்த்தியாகி மூன்று மூன்று
மூன்று மூன்றுமாய
தோன்று சோதி மூன்றுமாய்த்
துளக்கமில் விளக்கமாய்
ஏன்றெனாவியுள் புகுந்தது என்
கொலோ வெம்மீசனே"

"வேதங்களையும் மந்திர ரகசியங்களையும் தேவரீர் உண்டாக்கி வைத்திருந்தும் அவற்றைத் தெரிந்துகொள்ள நான் எந்த முயற்சியும் மேற்கொள்ளவில்லை. என்றாலும் என்ன காரணத்தினாலோ என் மீது பரிவு கொண்டு என்னையறியாமலே என் இதயத்துள் புகுந்துகொண்டு நான் செய்ய வேண்டிய செயல்களையெல்லாம் உமது பொறுப்பாகக் கொண்டு செய்துவரும் இறைவா இது என்ன நியாயம்" என பகவானின் அருள் மழையில் அவர் நனைந்து நெக்குருகிப் பாடும் காட்சியைக் காண்கிறோம். இரண்டாமடியில் வரும் நான்கு மூன்றுகள் சேர்ந்து பன்னிரண்டாகி "ஓம் நமோ பகவதே வாசுதேவாய" என்ற துவாதசாக்ஷரியைக் குறிக்கிறது. ஓம் என்ற பிரணவம் அ, உ, ம் என்ற மூன்று அட்சரங்களால் உருவானது; அவற்றுள் முதல் அட்சரமான அகாரத்துக்கு என்றும் அழிவற்ற விளக்கமாக விளங்கும் (துளக்கமில் விளக்கமாய்). "இறைவா என்னை நீயே வந்து ஆட்கொண்டது எங்ஙனம் நியாயம் ஆகும்" என்று உருகும் பாங்கு அடக்கமே உருவான பெரியவர்களின் தனிச் சொத்தாகும். ஒவ்வொருவரின் இதயத்துள்ளும் இறைவன் இருக்கிறான் என்ற இதே கருத்தை திருமூலர்,

"வானுக்குள் ஈசனைத் தேடும்
மருளர்காள்
தேனுக்குள் இன்பம் கறுப்போ
சிவப்போ
தேனுக்குள் இன்பம்
சிறந்திருந்தாற்போல
ஊனுக்குள் ஈசன்
உறைந்திருந்தானே"

என்ற பாடல் மூலம் வலியுறுத்துகிறார்.

கபீர்தாஸரும் தனது "தோஹா" என்ற ஒருபாடலில் இதையே கூறுகிறார். "எங்கெங்கோ தேடி அலைகிறாயே மனிதா! உன் இறைவன் உனக்குள்ளேயே இருக்கிறான். இது எவ்வாறு இருக்கிறது என்றால் தன்னுடைய நாபியிலிருந்து கஸ்தூரி வாசனை வருகிறது என்பதையறியாமல் மான் தேடி அலைவதைப் போல"

இவ்வளவோடு நின்றுவிடவில்லை திருமழிசைப்பிரான். மாமாயனைப் பற்றி எண்ணும்போதெல்லாம் அவன் அவதாரங்களில் நிகழ்த்திய லீலா வினோதங்கள் அவருக்கு நினைவுக்கு வருகிறது. அவற்றையும் பாசுரங்களில் குறிப்பிட்டு வியக்கிறார். எடுத்துக்காட்டாக,

"ஆனை காத்தோரானை கொன்று
அதன்றியாயர் பிள்ளையாய்
ஆனை மேய்த்தியானெயுண்டி அன்று
குன்ற மொன்றினால்
ஆனை காத்து மையரிக்கண்
மாதரார் திறத்து முன்
ஆனையன்று சென்றடர்த்த
மாயமென்ன மாயமே?"

ஆனைகாத்து - கஜேந்திரனென்ற யானையைக் காத்தருளி; ஆனை கொன்று - குவலாயபீட

மென்ற யானையைக் கிருஷ்ண வதாரத்தில் கொன்று; ஆனை மேய்த்தி - பசுக்களை மேய்த்து; ஆ நெய் உண்டி - பசுக்களின் நெய்யை உண்டு; குன்றம் ஒன்றினால் ஆனைகாத்து - கோவர்த்தன கிரியைத் தூக்கி குடையாகப் பிடித்து அதன் கீழே பசுக்கூட்டங்களை ரட்சித்து; ஆனை அடர்த்த மாயம் - நப்பின்னை பிராட்டிக்காக அவள் கண்எதிரே ஏழு எருதுகளைக் கொன்று மாயம் செய்த கண்ணு; என்ன மாயமே - உன் பராக்கிரமச் செயல்கள் யாவும் விந்தையிலும் பெரிய விந்தையன்றோ என வியக்கிருர் மழிசைப்பிரான்.

ஆழ்வார்கள அனைவரும் இறைவன் திருநாமத்தை வாயாரப்பாடி மனமார நினைந்து வாழ்ந்தவர்கள்; பகவானின் கல்யாண குணங்களில் ஆழ்ந்து கிடந்தவர்கள் இவர்கள்; பக்திச் சுவை ததும்பும் பாடல்களாகத் தீந்தமிழில் வடித்துக் கொடுத்தவர்கள். எங்கே கற்ருர்கள் இத்தமிழை என நாம் எண்ணும் போது பிறர் சொல்லித் தந்து வந்த ஞானமல்ல அது; அந்த பத்மநாபன் தன்னைத் தானே இவர்கள் மூலம் பாட வைத்துக் கொண்டான் என்றே எண்ணத் தோன்றுகிறது.



## கொடுக்கும் திங்கள் மார்கழி

பாற்கடல் பரந்தாமன் பதம் பணிந்து பக்தியாய்
சேர்க்கடல் முக்தியினை சேர்ந்து செழித்திடவே நாளும்
நீர்க்கடலென நெஞ்சம் நெகிழ்ந்துநகி நினைவால் அவனையே
தேர்க்கடலாய் தெரிந்து தெளியும் திருமிகு மார்கழியாம்

பனிந்த மாதமும் பாரதத்தனுக்கு பாங்காகும் போதினிலும்
உன்னிய கருமத்தால் உளமது சேர்கின்ற உய்வுடை
சென்னி யோங்கு திறமது தேகத்தைப் பற்றிப்பரவ
மன்னிய செல்வமென மகிழ்வே அருளும் மார்கழியாம்

தெருவெங்கும் திருப்பாவை செப்பியே சேரும் ஆலயத்தில்
உருவாகும் பக்திக்கு உயர்வுடை வேறில்லை என்னும்
திருமாலை தெரிசித்து சிந்தையும் குளிருடன் கலக்க
பெருவிழா காணவைக்கும் பேற்றினைப் பெருகின்ற மார்கழியாம்

ஆண்டாள் நாச்சியாரை ஆண்டுக்கொரு முறையேனும்
வேண்டியே சேவித்து விடையினை காணும் நோக்கால்
பூண்ட கணைகளினால் பொற்பாதம் பணிந்து தினம்
காண்கின்ற காட்சிகளால் கருத்தினை ஈர்த்திடும் மார்கழியாம்

சூடித்தான் கொடுத்தாள் சுடர்க்கொடி சுந்தரமாய் நாமும்
பாடித்தான் சேர்வோம் பதம்பெறுவோம் ஒன்ருய
கூடித்தான் தொழுவோம் கோவிந்தனை குறைகளை வென்று
நீடித்தான் கைகுவித்து நினைத்தது பெறுகின்ற மார்கழியாம்

பெய்கின்ற பனிபோல் பெருங்கருணை தனை ஈவான்
உய்கின்ற வழிபலவும் உத்தமன் காட்டிடவே மாந்தர்
பொய்கையினை கண்டதுபோல் புத்துயிர் பெற்று வாழ
கொய்கின்ற கனியெனவே கொடுக்கும் திங்கள் மார்கழியாம்

**கவிஞர் சோமசுந்தரப்பெருமாள்**
**தங்கவயல்.**



கார்கோடேஸ்வரர் கோயில் - காமரசவல்லி
-திருச்சி மாவட்டம்
திரு. எம். சுப்பிரமணியன் - திருமானூர்.

# ஏழரையின் ($7\frac{1}{2}$) ஏற்றம்

திரு. எம்.எஸ். பிச்சுமணி - சென்னை.

நடந்து வரும் இக்கலியுகத்தில் பொதுவாக $7\frac{1}{2}$ (ஏழரை) என்ற எண்ணைக் குறிப்பிட்டுச் சொல்லு போதும், மனதில் நினைத்துக் கொள்ளும் போதும் ஸ்ரீசனிபகவானின் தனித்தன்மையை நன்கு உணரமுடியும்.

ஒருவரது ஜனன காலத்தில் பிறந்த நேரத்தில் சஞ்சரிக்கும் சந்திரனின் நிலையை வைத்து அவரது இராசி குறிப்பிடப்படும்.

அந்த ஜாதகர் ஜனன மரண, இராசி நிலைக்கு முன்பான இராசியில், ஸ்ரீசனிபகவான் பிரவேசிக்கும் காலமான இரண்டரை வருடங்கள், அதற்கு பின்பான இரண்டரை வட்டங்கள், அதற்கு பின்பான இராசி நிலைக்குப் பிரவேசிக்கும் காலமான இரண்டரை, வருடங்கள் ஆக மொத்தம் ஏழரை ஆண்டு காலங்கள் மொத்த வருடங்களாக ஜ்யோதிஷ சாஸ்த்திரத்தில் விரிவாகவே சொல்லப்பட்டுள்ளது.

மேலே சொன்ன ஏழரை ஆண்டு காலங்களையும் நல்லபடியாக கடந்து செல்ல தோஷ பரிகாரங்களையும் எடுத்துச் சொல்லி ஒவ்வொரு சனிக்கிழமைகளிலும் ஸ்ரீசனி பகவானை வழிபடச்செய்வதுண்டு.

அந்த நம்பிகையின் அடிப்படையில் இன்றும் மனித வர்க்கம் - பிரார்த்தனைகளையும், வழிபாடுகளையும் தவறுது செய்து வருவதைக் கண்கூடாகக் காணலாம்.

இதுபோல முன்பொரு சமயம், (கலியுகத்திற்கு முன்பான காலத்தில்) தேவர்கள் நலம் பெரும் பொருட்டு "அமிர்தத்தை" பெறும் எண்ணத்தோடு பாற்கடலை கடைய ஆரம்பித்தார்கள்.

தேவர்களும், அசுரர்களும் பாற்கடலைக் கடையும் நேரத்தில் அமிர்தத்துடன் ஆலகால விஷமும் தோன்றியது.

கொடிய ஆலகால விஷத்தை சிவபெருமான் ஏற்றுக்கொண்டு நீலகண்டனாக மாறினார். இனிய அமிர்தத்தை தேவர்களுக்கு வழங்கினார்.

அமிர்தத்தைப் பெற்றுக் கொண்ட தேவர்கள் சிவபெருமானை வழிபட்டார்கள். சந்தோஷம் கொண்ட சிவபெருமான் திருநந்தி தேவரின் இரு கொம்புகளுக்கிடையே திருநடனம் புரிந்தார். அச்சமயம் சரஸ்வதி வீணை மீட்ட, இந்திரன் புல்லாங்குழல் ஊத, பிரம்மா தாளம் போட மற்ற அனைத்துத் தேவர்களும் ஒன்று கூடி சிவபெருமானை வழிபட்டு, அவரது அருளையும் பெற்றுர்கள்.

இந்த குறிப்பிட்ட கால கட்டத்தை பிரதோஷ காலமாக எண்ணி வழிபட்டார்கள்.

ஒவ்வொரு மாதத்திலும் சுக்கில கிருஷ்ண பட்சத்தில் வருகின்ற திரியோதசி திதியில் சூரிய அஸ்த்தமனத்திற்குமுன் மூன்றே முக்கால் நாழிகையும் பின்புள்ள மூன்றே முக்கால் நாழிகையும் உள்ள காலமே பிரதோஷ காலமாகும். ஆக ஏழரை நாழிகை காலம் பிரதோஷ காலமாகும்.

இந்த பிரதோஷ காலத்தில் அனைத்துத் தெய்வங்களும் சிவ சன்னிதியில் இருப்பதால் ஒரே சமயத்தில் எல்லா தெய்வங்களையும் வழிபட்டப் பெரும் நற்பலன்களைப் பெறவே இன்றும் மனித வர்க்கம் பிரதோஷ காலங்களில் சிவ சன்னதியில் கூடுவதைக் கண்கூடாகக் காணலாம்.

எனவே வருடங்களும் நாழிகைகளும் மனித குலத்திற்கு ஏற்றம் கொண்டவைகளாகும்.

ஸ்ரீசனி பகவானின் அருளும், சிவபெருமானின் கருணையும் பெறுவது உறுதி. தோஷ காலங்களில் இறைவனை வழிபடச் செயய நமது ஆன்ரோர்கள் காட்டிய வழிபாட்டுத் தத்துவம் என்றுமே நிலைத்து நிற்கும் என்பதற்குச் சந்தேகமே இல்லை.



# வேதாமிர்தம்

திரு. கோ.க.வா. கோவிந்தராஜ பாவனாச்சாரியாஸ்வாமி
ஸ்ரீரங்கம்.

ஐந்தாவது வேதமான மஹா பாரதத்தில் மார்க்கண்டேய முனிவர் தர்ம புத்திரருக்குக் கூறும் சுவையான வரலாறு:-

ஹேஹய தேசத்தில் ராஜகுமாரன் ஒருவன் இருந்தான். அவன் அழகும், அறிவும், வீரமும் நிரம்பப் பெற்றவன். அவன் வேட்டையாடுவதற்காகக் காட்டில் அலைந்து கொண்டிருந்தபொழுது, மான் தோலைப் போர்த்துக் கொண்டிருந்த முனிவர் ஒருவரைக் கண்டான்.

அவரை ஒரு மிருகம் என்று எண்ணி அம்பு எய்து கொன்றுவிட்டான். அவரருகில் சென்றதும் தான் தவறுதலாக ஒரு முனிவரைக் கொன்றுவிட்டதை எண்ணி மனம் மிகவும் வருந்தினான். தனது இராஜ்ஜியத்திற்குச் சென்று, ஹேஹய அரசர்களிடம் நடந்ததைத் தெரிவித்து அழுதான்.

அவர்களும் மனம் வருந்தி அனைவருமாக காட்டிற்குச் சென்று அம்பினால் இறந்து கிடக்கும் முனிவரைக் கண்டார்கள். அவர் யாரைச் சேரந்தவர் என்று தேடிச் சென்றார்கள். அப்பொழுது அவர்கள் கச்யப புத்திரரான அரிஷ்டநேமியின் ஆசிரமத்தை அடைந்தார்கள். அவர்கள் கடுந்தவம் புரியும் ரிஷியான அரிஷ்டநேமியை வணங்கி நின்றாரகள். முனிவரும் மிகவும் சந்தோஷத்தோடு வந்தவர்களை பூஜைக்குரிய உபகரணங்களோடு ஆராதிக்கத் தயாரானார். அப்பொழுது ஹேஹய அரசர்கள், "முனிசிரேஷ்டரே, நாங்கள் செய்த குற்றத்தால் உமது பூஜைக்குத் தகுதி அற்றவர்களாக இருக்கின்றோம். எங்களைச் சேர்ந்த ராஜகுமாரன் ஒருவனால் முனிவர் ஒருவர் கொல்லப்பட்டுக் கிடக்கிறார்" என்று கூறினார்கள்.

அரிஷ்டநேமியும், "உங்களால் அந்த ரிஷி எவ்வாறு கொல்லப்பட்டார்? அவர் எங்குள்ளார்? சொல்லுங்கள்; என் தபோபலத்தைப் பாருங்கள்". என்று கூறினார். பிறகு, ஹேஹேயர்கள் நடந்தவைகளை விவரமாய்க் கூறி, அனைவருமாக அம்பினால் அடிபட்டு இறந்து கிடக்கும் ரிஷியின் இருப்பிடத்திற்கு வந்து பார்க்கையில், உயிர் துறந்த அந்த ரிஷியை அங்கே காணவில்லை.

ஹேஹயர்கள் அங்குமிங்கும் தேடியும் எங்கும் ரிஷியைக் காணவில்லை. மனமொடிந்து வெட்கத்தாலும், சோகத்தாலும் துக்கப்பட்டார்கள். அப்பொழுது அரிஷ்டநேமி ஹேஹயர்களைப் பார்த்து, "உங்களால் கொல்லப்பட்டவன் இதோ இருக்கும் இந்த ரிஷியாக இருக்கலாம். இவன் தபோ பலமுள்ள என்னுடைய புத்திரன்" எனக் கூறினார்.

ஹேஹயர்கள் அந்த ரிஷியைப் பாரத்ததும், "இது மிகவும் வியப்பாக இருக்கிறது! இவர் இவ்விடத்தில் அம்பினால் அடிபட்டு உயிர்துறந்தார். மரித்துக கிடந்த இவர் எவ்வாறு உயிர்ப் பெற்றார்? இவரை மறுபடியும் பிழைக்கச்செய்தது தவத்தின் மகிமையா? இதை நாங்கள் தெரிந்துகொள்ளலாமா" என்றார்கள்.

அரிஷ்டநேமி, "அரசர்களே! எங்கள் விஷயத்தில் மிருத்யு அதிகாரம் செலுத்தச் சக்தியற்றவன். எங்கள திறத்தில் எமன் (மிருத்யு) திறமையில்லாதவனாக ஆனதற்குக் காரணத்தைச் சுருக்கமாகக் கூறுகிறேன்.

1) நாங்கள் சுத்தமான ஆகாரத்தையே சாப்பிடுகிறோம்.

2) நாங்கள் பொறாமை, சோம்பல் அற்றவர்களாக இருப்போம்.

3) நாங்கள் தினந்தோறும் பெற்றோர்கள், குலகுரு, பெரியோர்கள், ஆகியோர்களை பணிவன்போடு நமஸ்கரித்து ஆசீர்வாதங்களையும் பெறுவோம்.

4) நாங்கள் விடியற்காலையில் நீராடுவோம்.

5) காயத்ரீ மஹாமந்திர ஜபத்தில் முக்கிய நோக்குள்ளவர்களாக இருக்கிறோம்.

6) நாங்கள் சுத்தமான ஆகாரத்தையே உட்கொண்டு சுத்தமான இடத்திலேயே வஸிக்கிறோம்.

7) மனதால் பிரம்மசர்ய விரதத்

துடன இருக்கிறோம்.

8) உண்மையே பேசுகிறோம்; பொய் பேசுவதில மனதைச் செலுததியதிலலை.

9) எஙகளுககுரிய தரமத்தை அனுஷடிககிறோம.

10) உணமையான பிராம்மணர்க ளுக்கு நன்மையே செய்கி றோம.

11) அவரகளுக்குத தீங்கை மனத் தாலும் நினைததததில்லை.

12) பிறர் செயயும் நல்ல காரி யஙகளைப் பார்த்துச் சந் தோஷிக்கிறோம்; கொண்டாடு கிறோம்.

13) அதிதிகளுககும், எங்களை அண்டி இருப்பவர்களுக்கும் அதிக ஆகாரத்தை அளித்து நன்கு புஜிககச்செய்து மிச் சத்தை நாங்கள் உண்கி றோம்.

14) தெய்வ பணிகளுக்கு இயன்ற அளவு சகாயம் செய்கிறோம்.

15) யோகத்திலும், அனுஷ் டானங்களினாலும் ஸித்தி பெற்ற பெரியோர்களின் அருகில் நாங்கள் வஸிக்கி றோம். தினந்தோறும் ஆல யங்களுக்குச் செல்கிறோம். ஆசிரமங்களில் தினமும் பக வானை ஆராதித்து நிவே தனம் செய்த உணவையே புஜிக்கிறோம்.

அதனால் நாங்கள் மிருத்யு பயமின்றி, ஒரு குறைவுமின்றி நீண்ட ஆயுளோடு மிக வும் திருப்தியாக வஸிக்கிறோம். "ஹேஹய அரசர்களே! இவ் விஷயத்தைப் பற்றிச் சிறிதே கூறினேன். நீங்கள் அனை வரும் ஒன்று சேர்ந்து செல் லுங்கள். உங்களுக்குப் பாவத் தினின்று பயமில்லை" என்று கூறினார்.

இதைக்கேட்ட ஹேஹய அர சர்கள் அனைவரும் மிகவும் மகிழ்ந்து மகிரிஷியைப் பூஜித் துவிட்டுத் தங்கள் தேசத்திற்குச் சென்றார்கள்.

நித்ய ஸ்ரீர் நித்ய மங்களம்.

(நன்றி: குண்டூசி.)

---

## திருவாதிரை நாள்

நேரிசை வெண்பா

இன்றுதிரு வாதிரைநாள்! இங்கெளியேன் நம்சிவனை,
நன்றருளும் நாயகனை, ஞானஒளி-மன்றினிலே
ஆடி அடியவரை ஆட்கொள்ளும் ஆண்டவனைப்
பாடிப் புகழ்வேன பணிந்து.

தில்லைப் பதியினிலே சீரொழுகக் கூத்தாடும்,
வல்லபுகழ் அம்பல வாணனை-எல்லையிலா
அன்பின் உளத்தால் அடியனின்று போற்றுவேன்!
என்பின் இருந்தருள ஏய்ந்து.

என்னானை, என்னரசன், என்குருவென் றுனவனைப்,
பொன்னான மேனியனைப், புண்ணியனைப்-பன்னாளாய்ப்
பாடிப் பரவுகின்றேன்! பக்தியினாற் பாடியின்றும்
நாடிப் பயன்பெறுவேன் நான.

உணண அமுதை உவந்தளிக்கும் எம்பெருமான்,
எண்ணும் மனத்துள் இருந்தருள்வான்!-பண்ணுகின்ற
செநதமிழப் பாவிற் சிவனுருவே காண்கின்றேன்!
சிந்தையினால தேறத் தெளிந்து.

நன்றருளும் நாதன், நடராசப் பேருடையான்,
இன்றருளுந் தன்மை இனிதன்றோ!-வென்றியுறச்
செய்கின்ற அண்ணல் திருவடியைப் போற்றுவண்ணம்
உய்கின்றேன் யானே உவந்து.

திருத்தில்லை தன்னிற் சிறந்தாடுந் தென்னன்
பொருத்தமுடன வந்தருளும் பூமான்!-அருத்தமுடன்
பாடும் பணியருளிப் பாவியெனைத தேற்றுகின்றான்!
கூடும் கருணை குறித்து.

சீரார் திருவா திரையெனுநா ளின்றன்றோ!
நேரார் மனத்தின்கண் நேர்கின்ற-கூரார்
அறிவுகொணடு போற்றி, அவனருளின் சீர்மைச்
செறிவுகொண்டு தேர்வேன் தெளிந்து.

திரு. மா. வெயிலுமுத்து - மதுரை.



# நான் கண்ட வாரியார்

திரு. பொன். சௌரிராசன் - சித்தூர்.

அவதார புருஷர்கள் தோன்றும் போதே தோன்றும் அற்புதச் செயல்களால் உலகுக்கு உணர்த்தப் பெறுகிறுர்கள். அடியார்கள் தங்கள் பக்தித் தொண்டால் மெல்லஉரியவர்கள் ஆகின்றனர். உலகு உணர்ந்து பின்பற்றிப் பாராட்டுதற்கு உரியவர் ஆகின்றனர். அத்தகு மானுடச் சான்ரேர்களுள் இந்த நூற்ருண்டில் நம் கண் முன் தோன்றி எளிய இனிய தமிழில் அரிய பெரிய பொருள்கள் பற்றி ஆயிரக கணக்கான சொற்பொழிவுகள் பல்லாண்டுகள் ஆற்றிய பெருமகன் கிருபானந்த வாரியார் இந்த ஆண்டு இறையடி சேர்ந்தது நமக்கு ஈடுசெய்யமுடியாத ஒரு பேரிழப்பாகும்.

அவர் ஒழுக்க சீலர், உத்தமர், உதார குணத்தார். ஏழை எளியவர்பால் அன்புள்ளவர். தம வருவாயில் அரிய பல இறை, கல்வித் திருப்பணி புரிந்தவர. எல்லாவற்றிற்கும் மேலாக இளங்குழந்தைகள இறைபணியில், வழிபாட்டில் ஈடுபட்டு உள்ளத்தால் உயர்ந்து உலகை உய்விக்க வேணடும் என்பதில் கண்ணும் கருத்தும் மிக்கவர்.

1968 என்று நினைக்கிறேன். ஆந்திரமாநிலச் சித்தூர் ஜீவகாருண்ய சபையில் கந்தசஷ்டி உத்சவத்தின் போது சுவாமிகள் சொற்பொழிவு. சபை நிறைந்து வழிகிறது. ஏழெட்டு வயது சின்னஞ்சிருர்களும் சுவாமிகள் அருகே கூடி நெருங்கி குலுங்கக் குலுங்க அவர் பாடி ஆடிச் சிரிக்கும் அந்தப் பேரின்பத்தில் மூழ்கித் தாங்களும் தங்கள் குறும்புகளை மறந்து கேட்டுக்கொண்டிருக்கின்றனர்.



"நெஞ்சகமே கோயில் நினைவே சுகந்தம்
அன்பே மஞ்சன நீர்
பூசைகொள்ள வாராய் பராபரமே"

என்று உள்ளம் உருகப் பாடுகிருர். எதிரே சிறுவர்கள் சுவாமிகள பாட்டை உருக்கமாகக் கேட்டுக்கொண்டிருக்கின்றனர. உடனே, "இந்தப் பாட்டைப் பாடியவர் யாரப்பா... இந்தப் பிள்ளைகளில் யாராவது ஒருவர் சொல்லட்டும்" என்று சொற்பொழிவை நிறுத்திவிட்டுக் குழந்தைகளிடம் கண்ணேட்டம் இடுகிருர்.

தாயுமானவர்... ஒருகுரல் வருகிறது. 'எழுந்து சொல்லும்' எனகிருர் சுவாமிகள்.

மீணடும் தயககத்துடன் ஒரு சிறுவன் எழுந்து 'தாயுமான சுவாமிகள' என்று சொல்கிருன்.

சுவாமிகள் தன் கழுத்தில் பொலிந்து கொண்டிருந்த மலர் மாலையைக் கழட்டிக் கையில் ஏடுத்துக் கொண்டு அந்தச் சிறுவனிடம் சென்று அவனுக்கு அந்த மாலையைச் சூட்டுகிருர். சபை கரகோஷம் செய்கிறது. எல்லாச் சிறுவர் நெஞ்சிலும் பசுமரத்தாணியால் இந்தக் காட்சி பதிந்து விடுகிறது. இன்னும் என் நெஞ்சிலும் திகழக் காண்கிறேன். அந்தச் சிறுவன் இன்று இறைபணியில் இருக்கக் காண்கிறேன்.



# தாஸ்ய ஸம்ப்ரதாயம்

திருவேங்கட ராமானுஜ ஜீயர் - ஆழ்வார்திருநகரி.

"ச்ரவணம், கீர்த்தநம் விஷ்ணோ:
ஸ்மரணம், பாத ஸேவநம் ।
அர்ச்சநம், வந்தனம், தாஸ்யம
ஸக்யம், ஆத்ம நிவேதனம் ।।"

என்று கூறப்பட்டுள்ள ஒன்பது விதமான பக்திகளில் 'தாஸ்யம்' என்பதுதான் தலைசிறந்தது. "அகிலபுவநஜன்ம, ஸ்தேம, பங்காதிலீலே" என்று ராமாநுஜர் திருவாய் மலர்ந்தருளியபடி அண்ட சராசரங்களையெல்லாம் படைத்து, காத்து, அழித்து அந்த பரமாத்மா விளையாடுகிறான். நமது கருமேந்திரியங்கள், ஞானேந்திரியங்கள் மனஸ், புத்தி, சித்தம், அஹங்காரம் இவற்றால் அவனை அறிந்து கொள்ளமுடியாது. "அடியேன் இராமாநுஜதாஸன்" என்று ஒரு பக்தன் அவனை வணங்கினால் அக்கணமே பரமாத்மாவின் அருள் கிடைத்துவிடும்.

"அஹம் ஸ:" (நானும் அவனும்) என்றால் த்வைதம்; "ஸோஹம்" (அவனே நான்) என்றால் அத்வைதம்; "தாஸோஹம்' (அடியேன் தாஸன்) என்றால் விசிஷ்டாத்வைதம். எனவே விசிஷ்டாத்வைதத்தில் பரமாத்வாமின் அநுக்ரஹம் கிட்டுவதற்கு "தாஸ்ய ஸம்ப்ரதாயத்தையே' ' கடைப்பிடித்து வருகின்றனர்.

பரமாத்மாவிற்கு அடிமை செய்வதைக் காட்டிலும் பரமாத்ம ஸ்வரூபத்தை நம் அகக் கண்ணுக்குப் புலப்படுத்தும் ஆசார்யனுக்கு அடிமை செய்வதுவே நமது தருமம் ஆகும்.



ஸ்ரீமத் ராமாயணம் பாராயணம் செய்ய வசதி இல்லையென்றால் சிறிய திருவடியான ஆஞ்சநேய ஸ்வாமியின் 108 திருநாமங்களைப் பாராயணம் செய்தாலே போதும். அதற்கும் வசதியில்லையென்றால் "ஸீதா ஸமேத ஸ்ரீராம பாதஸேவா துரந்தராய நம:" என்று சொன்னால் போதும், அதற்கும் வசதியில்லையென்றால் "ஹரி: ஓம்" என்று சொன்னாலே நிச்சயம் பலன் கிட்டும்.

'ஓம்' என்ற பிரணவம் தாஸ்ய ஸம்ப்ரதாயத்தைத்தான் சொல்லுகிறது. அ, உ, ம் - என்ற மூன்று எழுத்துக்களும் சேர்ந்து பிரணவமாகிறது. அ என்றால் அந்த தசரதராமன்; ம் என்பது ஸீதையைக் குறிக்கிறபடியால் அந்த, கல்யாண ராமன். உ என்பது இராமனையும் ஸீதையையும் ஒன்று சேர்ந்த ஆஞ்சநேயரைக் குறிக்கிறபடியால் அந்த பட்டாபிஷேக ராமன். ஆகவேதான் நம்மாழ்வாரும், "கற்பார், இராமபிரானையல்லால் மற்றும் கற்பரோ" என்று இராமகாதையின் பெருமையை வியந்து கூறினார்.

எனவே நாம் எல்லோரும், பரமாத்மாவை நமக்குக் காட்டித் தந்த நமது தாஸ்ய ஸம்ப்ரதாயத்தைச் சார்ந்த ஆசார்யர்களின் திருவடி தொழுது அமைதியுடனும், ஆனந்தத்துடனும் வாழ்வோமாக.

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:

திருக்கச்சி நம்பிகள் அருளிய

# தேவராஜாஷ்டகம்

தி.அ. க்ருஷ்ணமாசார்யர், திருப்பதி.
(வித்வான், சிரோமணி)

## தனியன் - 1

ஸ்ரீமத் காஞ்சீமுநிம் வந்தே
கமலாபதி நந்தநம்
வரதாங்க்ரி ஸதாஸங்க
ரஸாயன பராயணம்.

| | | |
|---|---|---|
| கமலாபதி நந்தனம் | : | கமலாபதியினுடைய புதல்வராயும் |
| வரத அங்க்ரி | : | ஸ்ரீகாஞ்சீ வரதராஜருடைய திருவடிகளில் உண்டான |
| ஸதாஸங்க | : | இடைவிடாத பக்தியாகிற |
| ரஸாயன பராயணம் | : | புஷ்டியைத் தரும் மருந்தையே உயர்ந்த பயனாகக் கொண்டவருமான |
| ஸ்ரீமத்காஞ்சீமுநிம் | : | ஸ்ரீமத் காஞ்சீமுனியெனப்படும் திருக்கச்சி நம்பிகளை |
| வந்தே | : | வணங்கித் துதிக்கிறேன். |

ரஸாயனமென்பது உடலுக்குப் புஷ்டியை உண்டாக்கும் மருந்து. தேவப்பெருமாள் திருவடிகளில் ஸர்வகாலமும் உண்டான பக்தியென்கிற ரஸாயநமோவென்னில், நம்பிகளின் உடலுக்கன்றி, ஆத்மாவுக்குப் புஷ்டியை உண்டாக்கும் மருந்து. திருக்கச்சி நம்பிகள் பரம விரக்தராகையாலே உடலுக்குப் புஷ்டியை விரும்பாரன்றோ? ஞானிகளுக்கு உணவு குறைவதனால் உடல் தேயும். ஆத்மா பக்தியினால் பருக்குமென்க.

முனி = த்யானம் செய்பவர் என்றபடி. தேவப்பெருமாளை எப்போதும் இடைவிடாமல் நினைப்பவராதலால் முனி எனப்பட்டார்.

## தனியன் 2

தேவராஜ தயாபாத்ரம்
ஸ்ரீகாஞ்சீபூர்ண முத்தமம்
ராமாநுசுமுநேர்மாந்யம்
வந்தேஹம் ஸஜ்ஜநாச்ரயம்

| | | |
|---|---|---|
| தேவராஜ | : | தேவராஜரென்னும் ஸ்ரீகாஞ்சீ வரதராஜருடைய |
| தயா | : | திருவருளுக்கு |
| பாத்ரம் | : | இலக்கானவரும் |
| ராமாநுஜ முநே: | : | இராமாநுச முனிவருக்கு |
| மான்யம் | : | பூஜிக்கத்தக்கவருமாகி |
| உத்தமம் | : | இங்ஙனம் மிகவுயர்ந்தவரும் |
| ஸஜ்ஜன ஆச்ரயம் | : | நல்லோர்களுக்குப் புகலிடமுமான |
| ஸ்ரீகாஞ்சீபூர்ணம் | : | திருக்கச்சி நம்பிகளை |
| அஹம் வந்தே | : | நான் வணங்கித் துதி செய்கிறேன் |

முன்பு காஞ்சீமுனி - காஞ்சியில் வாழும முனி எனப்பட்டவர் நம்பிகள். இங்கு காஞ்சீபூர்ணர் - காஞ்சியில் வாழும் பூர்ணர் - அதாவது ஜ்ஞானம் பக்தி வைராக்யங்களால் நிறைந்தவர் எனப்படுகிறூர்.

தேவப்பெருமாளுக்குத் திருவாலவட்டம் வீசிய இவர் அவருடைய அருளுக்கு இலக்கானவர் ஆகிறூர்.

ராமாநுஜருக்கு இவர் மாந்யர் - மதிக்கத் தக்கவர் என்றபடி. அவருக்கு, நம்பிகள் பெருமாளிடத்தில் ஆறு வார்த்தை கேட்டு அருளிச்செய்ததும், பெருமாளுக்குத் திருமஞ்சன தீர்த்தம் கொண்டுவந்து ஸமர்ப்பிக்கும்படி நியமித்ததும் இதற்குக் காரணம்.

ஸஜ்ஜநாச்ரயம் - என்பதற்கு ஸத்புருஷர்களான ஆளவந்தாரையும் பெரிய நம்பிகளையும் ஆச்ரயமாகக் கொண்டவர் என்றும் பொருள் கொள்ளலாம்.

## 1

நமஸ்தே ஹஸ்திசைலேச

ஸ்ரீமந்! அம்புஜலோசன
சரணம் த்வாம் ப்ரபந்நோஸ்மி
ப்ரணதார்த்தி ஹராச்யுத

| | | |
|---|---|---|
| ஸ்ரீமன் | : | பெருந்தேவித்தாயார் தன்னிடம் எப்போதும் சேரப்பெற்றவனே! |
| அம்புஜலோசனை | : | தாமரைமலர் போன்ற திருக்கண்களையுடையவனே! |
| ப்ரணத ஆர்த்திஹர | : | வணங்கினவர்களின் துன்பத்தைப் போக்குமவனே! |
| அச்யுத | : | பக்தர்களைக் காக்குந்தன்மையிலிருந்து நழுவாதவனே! |
| ஹஸ்திசைல ஈச | : | ஹஸ்திசைலத்தில் உறைகின்ற ஸர்வஸ்வாமியான பேரருளாளனே |
| தே நம: | : | உனக்கு நமஸ்காரம் |
| (அஹம் | : | நான்) |
| த்வாம் | : | இப்படிப்பட்ட உன்னை |
| சரணம் | : | தஞ்சமாக |
| ப்ரபந்ந: அஸ்மி | : | அடைந்தவனாகிறேன். |

இந்த ச்லோகத்தினால் த்வயமந்த்ரம் நினைவுபடுத்தப் படுகிறது. ஸ்ரீமந் நாராயணசரணௌ சரணம் ப்ரபத்யே என்பது அம் மந்திரத்தின் முற்பகுதி. ஸ்ரீமதே நாராயணய நம: என்பது பிற்பகுதி. பிராட்டியை விட்டுப் பிரியாத நாராயணனுடைய திருவடிகளைத் தஞ்சமாகப் பற்றுகிறேன் என்றும், அத்தகைய நாராயணனுக்கு உகப்பாகத் தொண்டு செய்வேனாக நான் ஆகவேணும், என்னுடைய உகப்புக்காக அன்று, என்றும் முறையே இவ்விரண்டு பகுதிகளின் பொருள் ஆகும். இந்த ச்லோகத்திலுள்ள 'ஸ்ரீமந் த்வாம் சரணம் ப்ரபந்நோஸ்மி' என்ற சொற்களால் த்வயத்தின் முற்பகுதியும், ஸ்ரீமந் தே நம: என்ற சொற்களால் அதன் பிற்பகுதியும் நினைவுபடுத்தப்பட்டன காண்க. இரண்டு பகுதிகளிலும் நாராயணபதம் உள்ளதல்லவா? அதற்கு - நாரத்திற்கு இருப்பிடமென்றும், நாரத்தைச் சரீரமாகக் கொண்டு அதற்குள் அந்தர்யாமியாக உள்ளவனென்றும் இரண்டு பொருள்கள் உள்ளன. நாரமென்பதற்குத் திருமேனியும் பொருளாகையால் திருமேனியையுடையவன் என்ற நாராயண சப்தார்த்தம் 'அம்புஜலோசன' என்பதனால் உணர்த்தப்பட்டது. நாரத்திற்கு - எல்லாப் பொருளுக்கும் அந்தர்யாமியானவன் என்னும் நாராயண சப்தார்த்தம், அச்யுத(=யாரையும் விடாமல் உள்ளே உறைபவன்) என்பதனால் உணர்த்தப்பட்டது. இன்னும் நாரமென்பது உலகிலுள்ள எல்லாப் பொருள்களையும் உணர்த்துமாகையால் நாரத்தை - ஹஸ்திசைலத்தை இடமாகக் கொண்டவன் என்ற நாராயண சப்தார்த்தம் 'ஹஸ்திசைலேச' என்பதனால் உணர்த்தப்பட்டது. மேலும் 'ப்ரணதார்த்திஹர' என்பதனால் - வணங்குமவர்களின் துன்பங்கள் இன்னவையென்றறிவதற்கு அறிவும், அத்துன்பங்களைப் போக்குவதற்கு சக்தியும் உண்டென்று ஸூசிக்கப்படுவதனால், அறிவும் சக்தியுமாகிய அவ்விரண்டும் நாரசப்தார்த்தமாகையால் அவற்றையுடையவன என்ற நாராயண சப்தார்த்தம் உணர்த்தப்பட்டது.

ஆக இச்லோகம் த்வயமந்த்ரத்தின் உருவமாக அமைந்துள்ளதென்று கூறல் தகும்.

(2)

ஸமஸ்தப்ராணி ஸந்த்ராண
ப்ரவீண கருணோல்பண
விலஸந்து கடாக்ஷாஸ்தே
மய்யஸ்மிந் ஜகதாம்பதே.

| | | |
|---|---|---|
| ஸமஸ்த | : | எல்லா |
| ப்ராணி | : | ஆத்மாக்களையும் |
| ஸந்த்ராண | : | காப்பாற்றுவதில் |
| ப்ரவீண | : | வல்லமையுடையவனே |
| கருண உல்பண | : | கருணையினால் மிக்கவனே |
| ஜகதாம் | : | உலகங்கட்கு |
| பதே | : | தலைவனே |
| தே | : | உன்னுடைய |
| கடாக்ஷா: | : | கடைக்கண் பார்வைகள் |
| அஸ்மின் | : | இந்த (கீழ்த்தஞ்சமடைந்த) |
| மயி | : | என்னிடத்தில் |
| விலஸந்து | : | ஒளியை வீசவேண்டும் (ஒளிவிட்டு விளங்குக) |

கீழ்ச்லோகத்தில் பேரருளாளனைச் சரணம் புக்கார். அப்பெருமாள் நாம் சரணம் புகும்படியான தகுதிகளைப் பெற்றுள்ளானா என்று கேட்க அத்தகுதிகளை முன்னடிகளால் கூறுகிறுர். தகுதியாவன நம்மைக் காக்கும் ஆற்றலும் கருணையுமே ஆகும். அவை முறையே 'ஸமஸ்தப்ராணி ஸந்த்ராண ப்ரவீண' என்பதனாலும் 'கருணோல்பண' என்பதனாலும் உணர்த்தப்பட்டன.

ஐயா என்னைச் சரணம் புகுந்தீரே என்ன வேணும் உமக்கு என்று பெருமாள் கேட்க, உம்முடைய கடைக்கண்கள் அடியேன் மேல் விழுவதே அடியேன் எண்ணிய பலன் என்கிறுர் பின்னடிகளால்.

நம்பீ நீர் என்னைச் சரணம் புகுவதற்கும் நான் உம்மைக் கடாக்ஷிப்பதற்கும் - நம்மிருவர்க்குமுள்ள ஓர் உறவு வேணுமல்லவா அது என்ன என்று பெருமாள் கேட்க, 'ஜகதாம்பதே' என்றதனால் உறவு சொல்லுகிறுர். உலகமெல்லாம் உமது உடைமை. அதையுடையவர் நீர். அவ்வுலகில் அடியேனும் ஒருவனல்லவா? இவ்வுறவு போதாதா - அடியேன் தேவரீரைச் சரணம் பற்றுதற்கும் தேவரீர் கடாக்ஷம் அடியேன் மேல் விழுவதற்கும் - என்ருராயிற்று இதனால்.

## தனியன் - 3

நிந்திதாசாரகரணம்
நிவ்ருத்தம் க்ருத்யகர்மண:
பாபீயாம்ஸ மமர்யாதம்
பாஹிமாம் வரதப்ரபோ.

| | | |
|---|---|---|
| வரதப்ரபோ | : | வரங்களைத் தருகின்ற பெருமானே! |
| அமர்யாதம் | : | வேதத்தின் வரம்பை மீறியவனாய்- |
| நிந்தித ஆசார கரணம் | : | வேதத்தினால் இகழப்பட்ட செயல்களைச் செய்பவனும், |
| க்ருத்ய கர்மண: | : | வேதத்தினால் செய்யத்தக்கதாகச் சொல்லப்பட்ட செயல்களிலிருந்து |
| நிவ்ருத்தம் | : | மீண்டவனுமாகி |
| பாபீயாம்ஸம் | : | (இப்படி) அதிகமாகப் பாபம் செய்த |
| மாம் | : | என்னை |
| பாஹி | : | காத்தருளவேணும் |

முன் ச்லோகத்தில் கடாக்ஷத்தை வேண்டினார். கடாக்ஷமே போதுமா இன்னும் ஏதாவது வேண்டுமா? என்று பெருமாள் கேட்க, "பாஹி" ரக்ஷிக்க வேணும் என்கிறுர். பகவான் கடைக்கண்ணல் நோக்கினால் ரக்ஷணம்தானே உண்டாகுமென்று கருத்து. அதனால் தான் இதன் இறுதியிலும் 'உன்கருணையாகிற காற்றினால் தள்ளப்பட்டு அதனால் குளிர்ந்துள்ள உன் பார்வையாகிற அமுதக்கடலின் அலை வீசித்தெறித்த திவலைகளாலே அடியேனை நீராட்டியருளவேணும்' என்று - ரக்ஷணத்தை நேராக வேண்டாமல் கடாக்ஷத்தையே வேண்டுகிறுரென்பதும் நோக்கத்தக்கது.

செய்யவேண்டிய நற்கருமங்களைச் செய்யாமலிருப்பது, செய்யத்தகாத தீய கருமங்களைச் செய்வது, என்று இங்கு இரண்டினைக் கூறியது - பகவானிடம் அபசாரம் செய்வது, பாகவதர்களிடம் அபசாரப்படுவது, ஒருகாரணமுமின்றியே பகவத் பாகவதர்களிடம் பொருமை கொள்வது என்று இம்மூன்று பாவங்களுக்கும் உபலக்ஷணமென்று கொள்க.

இங்ஙனம் வேத வரம்பை மீறிய அடியேனைக் காப்பாற்ற வேணுமென்ருயிற்று இதனால்.

4

ஸம்ஸார மருகாந்தாரே
துர்வ்யாதி வ்யாக்ரபீஷணே.
விஷயக்ஷுத்ர குல்மாட்யே
த்ருஷா பாதப சாலிநி.

5

புத்ரதாரக்ருஹக்ஷேத்ர
ம்ருகத்ருஷ்ணும்பு புஷ்கலே
க்ருத்யாக்ருத்ய விவேகாந்தம்
பரிப்ராந்தமிதஸ்தத:

6

அஜஸ்ரம் ஜாதத்ருஷ்ணுர்த்தம்
அவஸந்நாங்கமக்ஷமம்
க்ஷீணசக்திபலாரோக்யம்
கேவலம் க்லேசஸம்ச்ரயம்.

7

ஸந்தப்தம் விவிதைர் து:க்கை:
துர்வசை ரேவமாதிபி:
தேவராஜ தயாஸிந்தோ!
தேவ தேவ ஜகத்பதே!

8

த்வதீக்ஷண ஸுதாஸிந்து
வீசிவிக்ஷேபசீகரை:
காருண்ய மாருதாநீதை:
சீதலைரபிஷிஞ்சமாம்.

| | | |
|---|---|---|
| தயா ஸிந்தோ | : | கருணையாகிய குளிர்ந்த நீருக்கு - வற்ருத கடலே |
| தேவ தேவ | : | நித்யஸூரிகளுக்குத் தலைவனே! |

| | | |
|---|---|---|
| ஜகத் பதே | : | உலகங்களுக்கு நாதனே! |
| தேவராஜ | : | தேவப்பெருமானே, |
| துர்வ்யாதி வ்யாக்ர பீஷணே : | | கெட்ட வ்யாதிகளாகிற புலிகளால் பயங்கரமானதும் |
| விஷய க்ஷுத்ர குல்ம ஆட்யே : | | சுவையொளியூறோசை நாற்றங்களாகிற சிறுபுதர்களால் நிறைந்ததும், |
| த்ருஷா பாதப சாலினி | : | ஆசைகளாகிற மரங்களால் விளங்குவதும், |
| புத்ர தார க்ருஹ க்ஷேத்ர ம்ருக த்ருஷ்ணு அம்பு புஷ்கலே | : | மனைவி மக்கள் வீடு நிலம் ஆகிய கானல் நீரால் நிரம்பினதுமான |
| ஸம்ஸார மருகாந்தாரே | : | பிறப்புத் தொடர்ச்சியாகிற பாலைவனத்தில், |
| க்ருத்ய அக்ருத்ய விவேக அந்தம் | : | செய்யத்தக்கது இது செய்யத்தகாதது இது என்னும் பகுத்தறிவு இல்லாதவனாயும், |
| இத: தத: | : | இங்கும் அங்கும் |
| பரிப்ராந்தம் | : | ஓயாமல் அலையுமவனாயும் |
| அஜஸ்ரம் | : | எப்போதும் |
| ஜாத த்ருஷ்ணு ஆர்தம் | : | உண்டான ஆசையால் மனக்கவலையுடையவனாயும் |
| அவஸன்ன அங்கம் | : | மிகவும் இளைத்த தேகமுடையவனாயும் |
| அக்ஷமம் | : | ஆற்றலில்லாதவனாயும் |
| க்ஷீண சக்தி பல ஆரோக்யம் : | | தேய்ந்துபோன தேகவலிமை மனவலிமை நோயின்மை என்னும் இவற்றையுடையவனாயும், |
| கேவலம் க்லேச ஸம்ச்ரயம் | : | துயரத்திற்கு மட்டுமே புகலிடமாயும் |
| ஏவமாதிபி: | : | இப்படிப்பட்ட |
| விவிதை: | : | பலவகையான |
| துர்வசை: | : | சொல்லமுடியாத |
| து:க்கை: | : | துக்க காரணங்களாலே |
| ஸந்தப்தம் | : | தாபமடைந்தவனாயும் இருக்கிற |
| மாம் | : | அடியேனை |
| காருண்ய மாருத ஆநீதை: | : | கருணையாகிற காற்றினால் கொண்டுவரப்பட்டவையும் |
| சீதலை: | : | அதனால் குளிர்ந்தவையுமான |
| த்வத் ஈக்ஷண ஸுதாஸிந்து வீசி விக்ஷேப சீகரை: | : | உன் பார்வையாகிற அமுதக்கடலின் அலைகளினுடைய வீசுதலால் உண்டான திவலைகளாலே |
| அபிஷிஞ்ச | : | நீராட்டியருளவேணும் |

(இன்னும் வரும்)



## பக்தி

பக்தியாவது தெய்வத்தை நம்புதல். குழந்தை தாயை நம்புவது போலவும், பத்தினி தன் கணவனை நம்புவது போலவும், பார்த்த பொருள்களை கண் நம்புவது போலவும், தான் தன்னை நம்புவது போலவும், தெய்வத்தை நம்ப வேண்டும்.

-பாரதியார்



## மதம்

எல்லா மதங்களும் உண்மைதான். மதப் பிரிவுகளால் மனிதர் பிரிந்து விடக்கூடாது. எல்லா மதத்தாரும் ஒரே தெய்வத்தைத் தான் வணங்குகிறார்கள். லௌகிக விஷயங்களைப் போலவே மதவிஷயங்களிலும் ஒப்பு, உடன்பிறப்பு, விடுதலை மூன்றும் பாராட்டப்பட வேண்டும்.

-பாரதியார்



## செய்யும் தொழிலே தெய்வம்

ஒழுங்கீனம், குறும்பு, முணுமுணுத்தல், ஆத்தமில்லாத ஆத்திரம் இவற்றால் பயன் ஒன்றும் கிடைக்கப்போவதில்லை. நாம் எக்காரியத்திலும் நிதானமாக ஈடுபடவேண்டும். இதயத்தில் தெய்வபக்தியுடையவர் யாரும் குழப்பம் செய்யவேண்டும் என்ற துராசைக்கு அடிமையாகமாட்டார். பொறுப்பில் சிரத்தை கொள்வது ஒரு வகையான பக்திதானே. பக்திதான் வணக்கம். உங்கள் வேலையில் நீங்கள் பக்தி கொள்வது கடவுளை வணங்குவது ஆகும்.

-ராஜாஜி.

தொகுத்தவர் : கமலா மாரியப்பன் - கோவை.



(தொடர் கட்டுரை)



# பகவத் கீதை

மூன்றும் அத்தியாயம்

## கர்ம யோகம்

உமைப்பிரியன்

### கண்ணன் கூறியது

இமம் விவஸ்வதே யோகம்
ப்ரோக்தவானஹமவ்யயம் ।
விவஸ்வான்மனவே ப்ராஹ
மனுரிக்ஷ்வாகவேऽப்ரவீத் ।। (1)

"அழியாத இந்த யோகத்தை (ஞானகர்ம ஸந்யாஸ யோகம்) நான் விவஸ்வானுக்குக் கூறினேன். விவஸ்வான் அதனை மனுவுக்குச் சொன்னான். மனு வானவன் (இந்த யோகத்தை) இக்ஷ்வாகுவுக்குப் பகர்ந்தான்."

[சூரியனுக்கு விவஸ்வான் என்று பெயர். மனு என்பார் ஸ்மிருதியை இயற்றியவராவர். ( மனுஸ்மிருதி) மனுவின் புதல்வன் இக்ஷ்வாகு. மேலும் அவன் சூர்ய குலத்தின் முதல் அரசனுமாவான். பெருமைமிகு இந்த யோகத்தைக் கற்றவர்க்கு இம்மை மறுமை இன்பம் எலலாம் வந்தடையும் என்று கூறப் படுகிறது.]

ஏவம் பரம்பராப்ராப்தமிமம்
ராஜர்ஷயோ விது: ।
ஸ காலேனேஹ மஹதா யோகோ
நஷ்ட : பரந்தப ।। (2)

"இவ்வாறு தலைமுறை தலைமுறையாக வந்துள்ள இந்த யோகமானது ராஜரிஷிகளுக்குத் (மாமுனிவர்கள்) தெரிந்திருந்தது. (ஆனால்) பரந்தப! காலப் போக்கில் இந்த யோகமானது இந்த மண்ணில் மறைந்துவிட்டது".

[சரியாகச் சொல்பவர்கள் மறைந்ததாலும், அல்லது இல்லாததாலும், கேட்போர் இல்லாததாலும் யோகமானது மறைந்து விட்டது. வல்லவர்களும், நல்லவர்களும் இருந்தால்

தான் நல்ல திட்டங்களை உருவாக்கும். அதனால் சிறப்பும் பெருமையும் பயனும் எல்லோரும் அடைவர்.]

ஸ ஏவாயம் மயா தேSத்ய யோக: ப்ரோக்த: புராதன: ।
பக்தோSஸி மே ஸகா சேதி ரஹஸ்யம் ஹ்யேதத்துத்தமம் ।। (3)

"நீ (அரச்சுனன்) என் (கண்ணன்) பக்தனாகவும் நண்பனாகவும் இருப்பவனாகையால் அந்த பழைய யோகமானது இன்று உனக்குக் கூறப்படுகிறது. இந்த யோகமே மிகச் சிறந்த மறை எனப்படும் ரகசியமாகும்."

[மறைந்து வைக்கப்பட்டது இரகசியம் என்று கூறப்படும். மறை என்று அழைக்கப்படும். இதனை மறைத்து வைப்பதால் மற்றவர்க்கு அது தெரிவதில்லை. காலப்போக்கில் அது வழக்கொழிந்துபோக வாய்ப்பு உண்டு. ஏனென்றால், இரகசியத்தைக் கற்றுத்தரும் அறிஞர்களும், அதனைக் கேட்க வேண்டிய தகுதி கொண்ட மக்களும் இல்லாததால்தான். ஆகவே தகுந்தவற்றை, தேர்ந்தவற்றைத் தெரிந்துகொள்ள தன்னைத் தகுதி கொண்டவனாக ஆக்கிக் கொண்டால்தான், இயற்கையும் அவனுக்குச் சரிசமமாக உதவி செய்யும். இச் சுலோகத்தின் மூலம், தகுதியுடையவனாக அர்ச்சுனன் இருப்பதையும், அந்த ஒரு காரணத்தால் இந்த யோகம் வெளியுலகிற்குத் தெரிய வாய்ப்பு ஏற்பட்டுள்ளது என்பதும் கூறப்படுகிறது. ஒரு அகல் விளக்கின் மூலம் பல விளக்குகள் ஒளிபெற முடியும் என்பதைப் போன்று, ஒருவனுடைய ஆற்றலால் அவனைச் சூழ்ந்துள்ள இடமும் ஆற்றல் பெறுகின்றது என்பது அறிவுறுத்தப்படுகிறது.]

## அர்ச்சுனன் கூறியது

அபரம் பவதோ ஜன்ம பரம் ஜன்ம விவஸ்வத: ।
கதமேதத்விஜானீயாம் த்வமாதௌ ப்ரோக்தவானிதி ।। (4)

"உமது (கண்ணனது) பிறப்பு பிந்தியது. (ஆனால்) விவஸ்வானுடைய பிறப்போ முந்தியது. நீர் அன்று அவரக்குக் கூறியதாகக் கூறுவது எப்படி?"

[இந்த உலகம் தோன்றிய போது விவஸ்வான் தோன்றினான். ஆனால் துவாபர யுகத்தில்தான் வசுதேவனுக்குப் பிள்ளையாகக் கண்ணன் பிறந்தான். ஆகவே பல ஆண்டுகளுக்கு முன்பு பிறந்த ஒருவனுக்கு, இப்போது பிறந்த ஒருவனால் எப்படி அறிவுறுத்தமுடியும், கற்பிககமுடியும் என்பதே அர்ச்சுனனது ஐயம.]

## பகவான் கூறியது

பஹூனி மே வ்யதீதானி ஜன்மானி தவ சார்ஜுன ।
தான்யஹம் வேத ஸர்வாணி ந த்வம் வேத்த பரந்தப ।। (5)

"நீயும் நானும், அர்ச்சுனா, பல பிறவிகளை எடுத்துவிட்டோம். பரந்தபா, அவற்றை (அப்பிறவிகளை) நான் அறிவேன். நீ அறியவில்லை."

[இறைவன் ஒவ்வொரு யுகத்திலும், ஒவ்வொரு நிலையிலும் தன்னைப் பல உருவங்களில் பிறவியெடுத்து வெளிப்படுத்துகின்றான். இறைவன் தன்னுடைய முன் பிறவிகளை என்றும் மறப்பதில்லை. ஏன் என்றால் அவன் இவ்வுயிர்களுக்கு நல்வழி காட்டவே தன்னை வெளிப்படுத்துகின்றான். ஆனால், பந்தபாசத்தால் வினை காரணமாக பிறவியெடுத்த மனிதன் தன் முன்பிறவிகளைப் பற்றி நினைக்கமுடியவில்லை. தன்னுடைய இரண்டு மூன்று வயதில் நடந்த நிகழ்ச்சிகளையே மனிதன் தன் நினைவில் கொண்டுவரமுடியாத போது, முன்பிறவி நிகழ்ச்சிகள் என்பதற்குப் பேச்சே இல்லை. ஆகவே இறைவனான கண்ணன் தன் முன்பெடுத்த ஒருபிறவியின் போது, வேறு வடிவில் விளங்கி விஸ்வானுக்கு இந்த யோகத்தைக் கற்பித்தார் என்பதே பொருள்.]

அஜோSபி ஸன்னவ்யயாத்மா பூதானாமீச்வரோSபி ஸன் ।
ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாம்யாத்மமாயயா ।। (6)

"நான் பிறப்பில்லாதவன், அழிவில்லாதவன். உயிர்களுககெல்லாம் நான் ஈசன் (தலைவன்). என்றாலும், இயற்கையை என் வசம் கொண்டு, ஆத்மாவின் மாயையினால் நான் அவதாரம் எடுக்கின்றேன்."

[இயற்கைக்குட்பட்டு உயிர்கள் பிறக்கின்றன. அந்த இயற்கையோ இறைவனுக்கு அடிமை புரிகின்றது. தன்னுடைய மாயா வினோதத்தால் தனக்கு ஒரு பிறவி கொண்டு இம்மண்ணில் இறைவன் பிறக்கின்றான். தானே தனக்கு ஒரு வினையை (கர்மாவை) ஏற்படுத்திக்கொள்கிறான். தன் வினையின் மூலம், அப்பிறவியின் போது ஒரு செய்தியை அறிவிக்கின்றான் அவ்விறைவன். அதாவது மனிதனின் மேம்பாட்டிற்காக ஒரு வினையை அவன் மேற்கொள்வதே அச்செய்தியில் காணக் கிடக்கும். அந்த வினையை, இறைவன் மிகச் சுலபமாக

ஏதோ ஒரு விளையாட்டாக மேற்கொள்கிறுன்.]

யதா யதா ஹி தர்மஸ்ய
க்லவானிர்பவதி பாரத ।
அப்யுத்தானமதர்மஸ்ய
ததாத்மானம் ஸ்ருஜாம்யஹம் ।। (7)

"பாரதா! எப்பொழுதெல்லாம் அறம் நீங்கிப்போய் (அழிந்தபோது) மறம் தோன்றுகின்றதோ அப்பொழுதெல்லாம் நானே என்னைப் பிறப்பித்துக் கொள்கிறேன்."

[பாரத வம்சத்தில் பிறந்ததால், அர்ச்சுனன் 'பாரதா' என்று அழைக்கப்பெறுகின்றுன். மனிதர்களைப் பெருமைப்படுத்தவே இறைவன் தன் முக்கியக் கடமையாகக் கொண்டுள்ளான். ஆகவே, அத்தகுமனிதன் வாழும் சமுதாயத்தில், அவனைக் கெடுப்பதற்காக தோன்றும் தீமைகளை அழிக்கவே, அவற்றினின்று மனிதர்களைக் காக்கவே இறைவன் கருணை கொண்டு இம்மண்ணில் பிறக்கின்றுன்.]

பரித்ராணுய ஸாதுனாம் வினாசாய
ச துஷ்க்ருதாம் ।
தர்ம ஸம்ஸ்தாபனார்த்தாய
ஸம்ப்வாமி யுகே யுகே ।। (8)

"நல்லவர்களைக் காப்பாற்றுவதற்காகவும், தீயோரை அடியோடு அழிப்பதற்காகவும், தர்மத்தை நிலைநிறுத்துவதற்காகவும், ஒவ்வொரு யுகம்தோறும் நான் பிறக்கிறேன்."

[கனி கொடுக்கும் செடிகள் நன்கு வளரவேண்டுமாயின் பயிர்கள் நல்ல விளைச்சல் தரவேண்டுமாயின், செடிகளின் பயிர்களின் ஊடே இருக்கும் வேண்டாத செடிகளை, களைகளை அவ்வப்போது பிடுங்கி எறிய வேண்டும். மேலும் தக்க உரங்களை மண்ணில் போடவேண்டும். இல்லாவிட்டால் பயன்தரும் செடிகள், பயிர்கள் நாளடைவில் பட்டுப்போகவோ, தரமற்ற விளைச்சல்களுக்கோ இடம் தரும். ஆகவே வேண்டாத செடிகளை எப்படிப் பிடுங்கி எறிவது அவசியமோ, சமுதாயத்தில் நல்லவர்களுக்கிடையே, நல்லவர்களைக் கெடுத்துவிடும் தீயவர்களையும் உடனடியாகக் களைய வேண்டும். மரணத்தின் மூலமாகத்தான் அவர்களது ஆதிக்கத்தை, எண்ணிக்கையை குறைத்திட முடியும். ரஜோகுணம், தமோகுணம் மிக்குள்ளவர்களை ஒடுக்கினால்தான் சத்வகுணம் உள்ளோர் பெருகிட முடியும். இந்தக் களையெடுக்கும் பணியைத்தான், இறைவன் தன் அவதாரங்களில் (நன்மை பெருக, தீமை அழிய) மேற்கொள்கிறுன்.]

ஜன்ம கர்ம ச மே திவ்ய மேவம்
யோ வேத்தி தத்வத: ।
த்யக்த்வா தேஹம் புனர்ஜன்ம
நைதி மாமேதி ஸோऽர்ஜுன ।। (9)

"அர்ச்சுனா, இவ்வாறு எனது தெய்வீகமான பிறப்பையும, செயலையும் யார் ஒருவன் அறிகின்றுனோ அவனுக்கு உடலை விட்டுச் சென்றபின் மறுபிறவி என்பது இல்லை, அவன் என்னையே வந்தடைகின்றுன்."

[இறைவன் தன மாயையினால் பிறப்பில்லாத தனக்கு ஒரு பிறப்பை ஏற்படுத்திக் கொள்கிறுன். வினைகளுக்கு அப்பாற்பட்டு விளங்கும் அவன், நல்ல வினைகளை செய்பவனாகத் தன்னைக் காட்டிக் கொள்கிறுன். இந்த கடவுட் பேருண்மையை அறிபவர்கள், பிறவியாகிய பெருங்கடலை வெகு எளிதாகக் கடந்து விடுவர். தெரியாத ஒரு விஷயததை மற்றவரிடம் சென்று அவர் கூற நாம் அறிந்து கொள்வது என்பது சற்றுக் கடினமான பயிற்சியாகும். அதே நேரத்து அந்த விஷயங்களை நல்ல நெறிகளை ஒருவர் வாழ்ந்து காட்டும் போது, அதை உடனிருந்து அல்லது அவ்வாழ்க்கையை நினைந்து நினைந்து அறிந்து கொள்வது என்பது மிகவும் எளிமையாகும். உடனடியாக பின்பற்றக்கூடியதுமாகவும விளங்கும்.]

வீதராகபயக்ரோதா மன்மயா
மாமுபாச்ரிதா: ।
பஹவோ ஞானதபஸா பூதா
மத்பாவமாகதா: ।। (10)

"ஆசை, பயம், கோபம் அற்றவர்களாய், என் வசமாய, என்னையே அடைக்கலமாகக் கொண்டு, ஞானதத்வத்தால் புனிதர்களாகப் பலர் என்குணநலன்களைக் கொண்டவர்களாக விளங்கினர்."

[மனிதப் பிறவியின் நோக்கம் மனித இயல்பு மறைந்து இறை இயல்பு பெறவேண்டும் என்பதே. அதாவது மனிதன் மனதாலும், உணர்வாலும், உடலாலும் புனிதம் அடையவேண்டும். மனிதன் சிந்தனையாலும், செயலாலும் இறைபற்றிய நினைவுகளுடன் திகழ்வானேயானால் அவனுள் இறைப் பண்புகள் தானாகவே வந்து குடிகொள்ளும். காந்தத்துடன் கூடிய இரும்புத்துண்டு எவ்வாறு காந்த சக்தி பெறுகிறதோ, அதே போன்று இறைமைப் பண்புகளுடன் கூடிய மனிதனும் இறைவனுடன் ஒன்றித்து விடுகின்றுன். இந்த நிலை ஏற்படவேண்டுமாயின் முதலில் மனிதன் தன்னை உயர்த்திக் கொள்ளவேண்டும்.

அதறகு அவன தனனுள உல விடும மறபபணபுகளை அறவே களைய வேணடும. மனிதனை இழிநிலைகது அழைத்துச செல லும பணபுகளாக ஆசை, பயம், கோபம போனறன விளங்கு கினறன. இவ்றறை விடடொ ழிவதே மனிதன உயரநிலைக்கு இட்டுச செல்லும் முதல படி யாகும்.]

*யே யதா மாம் ப்ரபத்யந்தே*
*தாம்ஸ்ததைவ பஜாம்யஹம் ।*
*மமவர்த்மாநு வர்த்தந்தே*
*மநுஷ்யா: பார்த்த ஸர்வச: ।। (11)*

"யார்யார் என்னை எவ்வாறெல் லாம் வணங்குகினறாரகளோ, அவர்களுக்கு நான் அவ்வாறே அருள் செய்கின்றேன். பார்த்தா, (அர்ச்சுனா) மக்கள் எப்போதும் என் வழியைத்தான் பின்பற் றுகின்றனர்."

[மண்ணுலக இன்பத்திற்கும் (போக வாழ்விற்கும், விண்ணு லக இன்பத்திற்கும் (முக்தி இன் பம்) அடிப்படைக் காரணமாக இருப்பவன் இறைவன். தன் மாயையினால் அவன் மக்களை அவர்களுடைய வினைப்பயன்க ளுக்கேற்ப மனம் மற்றும் அறிவு நிலைகளுக்கு ஏற்ப நடத்திச் செல்கின்றான். அதனால், மக்க ளும் தங்களுடைய மனம் மற் றும் அறிவு முதிர்ச்சிக்கேற்ற வாறு, காலம் மற்றும் முயற் சியின் பின்னணியில், இறை வனை அடைகின்றனர். இது போது, அவர்கள் போக்கிலேயே இறைவனும் உடன் இருந்து, அவர்களைத் திருத்துகின்றான்.]

*காங்க்ஷந்த: கர்மணாம் ஸித்திம்*
*யஜந்த இஹ தேவதா: ।*
*க்ஷிப்ரம் ஹி மாநுஷே லோகே*
*ஸித்திர்பவதி கர்மஜா ।। (12)*

"வினைப்பயனை (அப்போது புரியும கரமஙகளினால் விளை யும பயனகளை) பெற விரும் புபவரகள இமமை வாழ்வில் (மணணுலக வாழ்ககையில்) சிறு கடவுளர்களை வேண்டுகின்ற னர. எனெனறால் வினையி னால் பெறப்படும் பயன்களை இநத மண்ணில் உடனே பெற முடிகின்றது."

[மனிதர்களுடைய விருப்பங் கள் அவரவரகளுடைய மன முதிர்ச்சிக்கேற்றவாறு அறிவின் மேன்மைக்கேற்றவாறு அமை கின்றன. புலனிப்பங்களிலேயே அதிகமாக நாட்டம் கொண் டுள்ளவர்கள், தற்காலிகமான பயன்களையே எதிர்பாக்கின்ற னர். அவற்றை அனு பவிப்பதையே தங்கள் பிறவி யின் காரணமாகக் கருதுகின் றனர். அதற்காகச் சிறு சிறு தெய்வங்களையே நாடு கின்றனர். இன்றைய கண் ணோட்டத்தில் பார்ப்போமேயா னால் ஒரு மாநில முதல் வருடன் சாமான்யன் நட்பு கொள்வது என்பது கடினம். ஒருவாறு நட்பு ஏற்படுமாயின் அதன் விளைவால் சாமான் யன் எதிர்பார்க்கும் பயன்க ளும் பெரியதாக அமையும். அவற்றை அம்முதல்வரும் தரக் கூடிய தகுதியும பெற்றிருப்பார். ஆனால் அவ்அமைச்சரின் கீழ்ப் பணிபுரியும் அலுவலர் களிடமும் சாமான்யன் நட்பு கொள்ளலாம். அதனால் அச்சா மான்யன் பெறுவதும், அவ்அ லுவலர் தருவதும் சிறு சிறு பயன்களாகத்தான் அமையும். அது போன்றே அப்பரமனைத் தொழுவோர் பக்தி, ஞானம், முக்தி பெறலாம். சிறு சிறு தெய்வங்களை வழிபடுவோர், அவரவர்களுடைய மன, அறிவு நிலைக்கேற்றவாறு பயன்பெ றுவர்.]

*சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம்*
*குணகர்மவிபாகச: ।*
*தஸ்ய கர்த்தாரமபி மாம்*
*வித்த்யகர்த்தாரமவ்யயம் ।। (13)*

"குணங்களுக்கும், வினைகளுக் கும் தக்கவாறு நான்கு வர் ணங்களை (பிரிவினரை) நான் படைத்துள்ளேன். அதற்கு நான்தான் காரணம் (கர்த்தா) என்றாலும் என்னை அவிகாரி என்றும், அகர்த்தா என்றும் அறிவாயாக."

[குணங்களுக்கிடையே நில வும் வேறுபாடுகளைக் கொண்டு இறைவன் உயிர்களைப் படைக் கின்றான். முக்குணங்களுக்கி டையே உள்ள பிரிவால் நான்கு ஜாதிகள் (வர்ணங்கள்) ஏற்ப டுத்தப்பட்டுள்ளது. சத்துவகு ணம் நிறைந்து விளங்குபவன் பிராம்மணன் என்றழைக்கப்படு கின்றான். சத்துவ குணம் சிறிதுடன் ரஜோ குணமும் கொண்டு விளங்குபவன் க்ஷத் திரியன் என்று சொல்லப்படுகி றான். சத்துவ, தமசு குணங் களுடன் ரஜோ குணம் அதி கமாகக் கொண்டு இருப்பவன் வைசியன் என்று பெயர் பெறு கின்றான். தமோ குணம் அதிக மாகவும் ரஜோ குணம் சிறிதும் கொண்டு இருப்பவன் சூத்திரன் என்று அழைக்கப்பெறுகின்றான். சத்துவத்தின் நிறம் வெள்ளை. ரஜோ குணம் சிவப்பு நிறம் கொண்டது. கருப்பு தமோ குணத்திற்குரியது. இவ்வகை யில் பிராம்மணனுடைய நிறம் வெள்ளையாகவும் க்ஷத்திரியன், நிறம் சிவப்பாகவும், வைசிய னுடைய நிறம் மஞ்சளாகவும், சூத்திரனின் நிறம் கருப்பாக வும் வந்தமைகிறது. ஆனால் இந்நிறங்கள் கண்ணுக்குத் தெரி யும் உடல்மேல் (தோல்மேல்) கொண்டு விளங்குவன அல்ல.

வெள்ளைநிறம் கொண்டோ ரெல்லாம் பிராம்மணராக கரு தப்படமாட்டார். கருப்பு நிறம் கொண்டோரெல்லாம் சூத்திர ரும் அல்ல. இந்நிற வேறுபாடு கள் அவரவர்களுடைய குணந லன்களுடன் கூடிய மனத்தைப் பொறுத்தது ஆகும். அவ்வவ் குண இயல்புகளை ஒரு இலக்க ணமாகக் கொண்டு விளங்கிட்ட போது அம்மக்கள் குறிப்பிட்ட ஜாதிகொண்டு அழைக்கப்பட்ட னர். ஆனால் இன்றைய சமூக அமைப்பில் அந்த அள வுமுறை ஜாதிபிரிவுக்கு அடிப்ப டையாக அமையாது. ஒரே குடும்பத்தில் இருக்கும் நான்கு பேர், மேற்குறிப்பிட்ட குணங் களைக் கொண்டு வேறுபட்டி ருப்பின் அக்குடும்பம் நான்கு ஜாதிகளைக் கொண்ட நபர் களைக் கொண்டு விளங் குகிறது என்றே பொருளா கும். ஆம் குணநலன்கள் உயிர்ந்தோங்கும் அளவு, கீழ்நி லைக்கு போகும் அளவு சூத்தி ரன் பிராம்மணனாகவும், பிராம் மணன் சூத்திரனாகவும் மாறு வர். ஆகவே பிறப்பால் ஒருவன் தன்னை உயர்ந்த ஜாதி என்று அழைத்துக் கொள்ள முடி யாது. குணங்களின் மேன்மை கொண்டு விளங்கும் எவரும் பிராம்மணனே. குணத்தில் கீழானவர் எவருமே சூத்திரனே.]

ந மாம் கர்மாணி லிம்பந்தி நமே
கர்மபலே ஸ்ப்ருஹா ।
இதிமாம் யோऽபிஜானாதி
கர்மபிந ஸ பத்யதே ।। (14)

"வினைகள் யாவும் என்னைச் சேராது. எனக்கு வினைப்ப யனில் ஆசை இல்லை. இவ் வாறு (இதை) என்னை அறிப வன் வினைகளுக்கு அடிமையா கமாட்டான்."

[இறைவன் எல்லாம் கடந்து இருப்பவன். அதே சம யத்து எல்லாவற்றையும் தமக் குள் கொண்டு விளங்குபவன். அதனால் மனிதனே ஆசைகளுக் குப் பிறப்பிடமானவன். தன் னிடம் இல்லாததை அவன் அடைய ஆசைப்படுகின்றன். வாழ்நாளில் அவன் அடைய முடியாத இவ்வுலக இன்பங் கள் ஏராளம். அவற்றை அடை யவே அவன் பெரிதும் எப் போதும் முயற்சிப்பதால், ஆசை களே அவனது வாழ்நாளை முடித்துவிடுகிறது. அவ்வாறு மனதை ஆசைகளுக்கு அடிமை யாக்காமல், ஆசையற்ற, கர் வமற்ற வினைகளுக்கு அப் பாற்பட்ட இறைவனை அவன் நினைந்து வாழ்ந்தானே யானால் இறைவனைத் தன் னுள் காண முயற்சித்தானா யின், வினைகளின், ஆசைக ளின்வழி அவன் தன்னை இழக் கமாட்டான்.]

ஏவம் ஞாத்வா க்ருதம் கர்ம
பூர்வைரபி முமுக்ஷுபி: ।
குரு கர்மைவ தஸ்மாத்த்வம்
பூர்வை: பூர்வதரம் க்ருதம் ।। (15)

"முன்பிருந்த முமுக்ஷுக்களும் இவ்வாறு அறிந்துதான் வினை யாற்றினர். ஆகவே நீயும் முன்பு முன்னோர்கள் செய்த படியே வினையாற்றுவாயாக."

[அறிவுள்ளவன் வினைப்ப யனை எதிர்பார்க்க மாட் டானே தவிர, வினையை தொடர்ந்து செய்தவனாகவே இருப்பான். ஏனெனில் அவன் கர்வம், ஆசை ஆகியவற்றைத் தன்னிடமிருந்து ஒழித்துவிடுகி ருன். இறைவனைக் காண வேண்டுமென்று நினைத்த முன் னோர்கள் யாவரும் இந்த வழி யைத்தான் பின்பற்றினார்கள்.]

(தொடரும்)





திருவெள்ளரைக் குகைக்கோயில்

# தொண்டரடிப்பொடியாழ்வார்

திருமதி. கே. தேவகி - திருப்பதி.

**வ**ளமமிகக காவிரிநதி பாயும வாயபபைப பெறறது சோழவளநாடு. சோழவளநாட டில வைணவத திருப்பதிகள பலவுள. அவறறுள ஒனறு புள ளம் பூதஙகுடி எனபது. இது திருமங்கை ஆழவாரின மஙக ளாசாசனம் பெறற திருத தலம். இத்திருத்தலத்துகக ருகே திருமண்டலஙகுடி எனனும பெயருடைய திருததலம் ஒன றுண்டு. வேதஙகளைக கறறு, வேத நெறியில் ஒழுகி வநத வேதியர் ஒருவர வாழ்ந்து வந் தார. இவருககுத திருமாலின திருவருளால் திருககுமாரர ஒரு வர் அவதரிததார.

இககுழந்தை திருமாலின் வன மாலையின் அம்சமாக அவதரித் தது. இக்குழநதைககுத் தந்தை யார், விப்ர நாராயணர் என் னும் திருநாமம் சூட்டி மகிழ்ந் தார். வேத விதிப்படி செய் யவேண்டிய சடங்குகளை எல் லாம் விப்ரநாராயணருககுத் தந்தையார் உரிய பருவங்களில் செயது சிநதை குளிர்ந்தார்.

நான்கு மறைகளையும், ஆறு சாததிரங்களையும் விப்ரநாராய ணர் கறறுத தேரந்தார. கல்வி யறிவும் கேளவியறிவும் வாய்க் கப்பெற்ற விப்ரநாராயணரின் ஞான வளர்சசியைக கண்டு தந் தையார் மனம பூரித்தார.

'ஓம்' எனும திருமநதிரத்தின உட்பொருளை உணர்நத விப ரநாராயணருககுத திருமாலின் திவ்ய குணங்களில் மனம் லயித் தது. இதனால் நாரணனிடத் திலேயே ஆழநத சிநதனையு டையவரானார விப்ரநாராய ணர். பேரினபத்தை அளிக் கவலல பெருமாளின் நினை வாகவே இருந்து வந்த தால, இவருககு இவ்வுலக இன்பத்தில ஈடுபாடு ஏற்பட வில்லை. எனவே, இவர் திரு மணம் செய்து கொள்ளாமல் பிரம்மசசரியததையே கடைப் பிடித்து வநதார.

திருமால எழுந்தருளியிருக்கும் திருத்தலங்கட்கெல்லாம் சென்று வழிபட வேண்டும் என்ற சிந்தனை இவருக்கு ஏற்பட லாயிற்று. திருவரங்கம் எனப்படும் பெரிய கோயி லுக்கு இவர் முதலில் சென் றுர். அங்கே காவிரியாற் றிடைக்குறையில எழுந்தருளியி ருக்கும் எம்பெருமானைக் கண்டு



நெஞ்சு உருகினார். குடதிசை முடியை வைததுக் குணதிசை பாதம நீட்டி வடதிசை பின்பு காட்டித தென்திசை இலங்கை நோக்கிப் பளளி கொண்டிருக் கும பரநதாமனின் வடிவழகைக் கண்டு பகதிப் பரவசமடைந் தார.

அரங்கநாதபபெருமாளுக்குப் பூவும மாலையும் திருக்குழா யும சமர்ப்பிககும அரும் பணியை மேற்கொண்டொழுகி னார். இதற்கான நந்தவ னம் ஒன்றையும் இத்திருபபதி யில் இவர அமைத்தார். திரு வரங்கத்திலேயே தங்கித் திரு வரஙகப்பெருமானுககே சேவை செய்து, அந்தணர் இலலங்க ளுககுச் சென்று, அனனததைப் பிச்சையாகப பெற்று, அமுது செயது அகம் மிக மகிழ்ந்து வந்தார்.

வழக்கம் போல ஒருநாள் விப்ரநாராயணர நந்தவனத்தில் தன் பணியை செய்து கொண டிருந்தார். அபபோது தேவ தேவி எனனும் பெயருடைய அழகு மங்கை ஒருததி அந்த நந்தவனத்திற்கு வநது சேரந் தார். நநதவனத்தில திருப் பணி செய்து கொணடிருநத விப்ரநாராயணரைத் தேவதேவி கண்டுவிட்டாள். அவருடைய வடிவழகில தன் மனத்தைப் பறிகொடுததாள. எனவே தேவதேவி விப்ரநாராயணரின திருமுனபு சென்று நின்றுள. பணிவுடன வணஙகி எழுந தாள. தன உடலழகையெல் லாம காட்டி அவரை மயககு

முற்பட்டாள். ஆனால் விப்ர நாராயணரோ தேவதேவியைப் ஏறெடுத்தும பார்ககவில்லை. தன் பணியிலேயே கவனம் மிக் கவராக இருந்தார்.

மன்னாதி மன்னரையும் தன் அழகால் மயங்க வைக்கும் தேவ தேவியின் சாகசம் விப்ரநாராய ணர்பால் பலிக்கவிலலை. தன் எண்ணம் வெற்றி பெருததைக் கண்ட தேவதேவி தன் அரு கிலிருந்த தன் தமக்கையிடம் "இவன் பித்தனோ? பேயனோ? என்று கேட்டாள்.

இதைக் கேட்ட அவள் "இவன் பித்தனுமல்லன், பேயனுமல் லன், பேடியுமலலன்! தெய் வத்தொண்டில் ஊன்றி நிறகும் மகாவிரதன். பக்தி வைராக் யமுடைய இவனை வசப்ப டுத்த உனனால் ஆகாது!" என்று உறுதிபடக் கூறினாள். "இவனை என் வசப்படுத்தாமல் விடமாடடேன!" என்று தேவ தேவி தன் தமக்கையிடம் சபதம் செய்தாள்.

தேவதேவி ஓர உபாயஞ்செய் தாள். தான் அணிந்தி ருந்த அணிகலன்களையெல்லா தன் தமக்கையிடம் கழற்றிக் கொடுத்தாள். பட்டாடைக ளைக் களைந்தாள. காவி யுடையை உடுததிக் கொண் டாள். பெண் துறவியைப் போன்றகோலத்துடன் சென்று விப்ரநாராயணரின் திருவடிக ளில் வீழந்து வணங்கினாள். தன்னை வணஙகி நிற்கும் தேவ தேவியை விப்ரநாராயணர் நிமிர்ந்து பார்ததார். "நீ யார்? இஙகு ஏன வந்தாய்?" என்று கேடடார்.

தேவதேவி தன் எண்ணம் பலித்ததென்று மகிழ்ச்சி கொண் டாள. எனவே பணிவோடு பதில கூறலானாள்.

"சுவாமி! நான வேசையர குலத்தில் பிறந்தவள. என் தாய் என்னை எங்களின் குலத் தொழில் செய்யுமாறு வற்புறுத் துகிருள். எனக்கோ அது சம்மதமில்லை. எனவே, தங் களைச் சரணடைந்து உய்வு பெற எண்ணுகிறேன். தங்க ளுககு உதவியாக நந்தவனப் பணியினை நான் செய்து வர எனககு அருள்புரிய வேண் டும். பாத்தி கொத்துதல், செடி நடுதல், நீர் பாய்ச்சுதல், பூப் பறித்தல்; மாலை தொடுத்தல் முதலான பணிகளைக் தங்கட்கு உதவியாகச் செய்து வருவேன். தாஙகள் எனனை வெறுத்து ஒதுக்காமல் ஏறறுக கொண்டு அருள் புரிய வேண்டும்.!" எனறு அடுக்கிக் கொண்டே பேசினாள்.

இவள் பேச்சையெல்லாம் விப் ரநாராயணர் பொறுமையாகக் கேட்டுக் கொண்டு இருந்தார. இவள் பேச்சுக்களை உண்மை யென்றே நம்பினார். எனவே. தன்னுடன் தங்கிப் பணிபுரிய அனுமதி தந்தார். அவளும அவ ரின் மனத்துக்கேற்ற வ்ண்ணம் நடந்து வரலானாள்.

இவ்வாறு மாதங்கள் பல சென்றன. ஒருநாள் விப்ரநா ராயணர தன் குடிசைக்குள் தங்கியிருந்தார். அப்போது பெருமழை பெய்து கொண்டி ருந்தது. மழையில் நனைந் தவளாய்த் தேவ தேவி குடி சைக்குள் நுழைந்தாள். அவள் நிலை கண்டு விப்ரநாராயணர இரககம் கொண்டார். அதுவே தக்க சமயமென்று தேவதேவி தன் சாமர்த்தியத்தால மயககித் தன் வசப்படுத்தினாள். மனம் மயங்கிய நிலையில் விப்ரநாரா யணர தேவதேவியின வசமா னார. காமம் வென்றது.

இவ்வாறு வெற்றி கொண்ட தேவதேவியுடன் விபரநாராய ணர் சிலகாலம் வாழ்ந்து வந்தார். விப்ரநாராயணரி டமிருந்த செல்வம் அனைத் தும் கரைந்தது. விப்ரநாரா யணரை வறுமை ஆட்கொண் டது. செல்வமற்ற விப்ரநா ராயணரிடம் தேவதேவி தங்கி யிருப்பாளா? அவள் அவரிடம் சொல்லிக்கொள்ளாமலேயே தன் இல்லம் சென்றுவிட்டாள்.

தேவதேவியின் பிரிவைத் தாங்கிக்கொள்ள விப்ரநாராய ணரால் இயலவில்லை. எனவே அவள் வீட்டைத் தேடிக்கண்டு பிடித்தார. வீட்டு வாயிற்படி யின் வெளியிலேயே தயக்கமு டன் நின்றுகொண்டிருந்தார்.

விப்ரநாராயணர் நிற்கும் பரி தாப நிலையை வைகுந்தத்தி லிருந்த இலககுமி தேவி யார் திருமாலிடம் சுட்டிக்காட் டினார. தன பக்தனின் மனத் தைப பககுவப்படுத்திப் பக்திநி லைக்கு மீண்டும் திரும்புமாறு அவனுக்கு அருள்புரிய வேண் டும் என்று இலக்குமி வேண் டிக்கொண்டார். திருமாலும் பிராட்டியின் வேண்டுகோளுக்கு இசைந்து செயல்படத் தொடங் கினார்.

திருமால் மானிட வடிவந்தாங கினார். தன் திருக்கோயிலிலி ருந்த பொற்கிண்ணம் ஒன்றை யாரும அறியாவகையில் எடுத் துக் கொண்டார். நேரே தேவ தேவியின் வீட்டுககுச சென்றார். அங்கு நின்றிருந்த விபரநாராய ணரின கணகளுககுப் புலப்ப டாமல் வீட்டுக கதவைத் தட் டினார.

உள்ளே இருந்த தேவதேவி கதவைத் திறந்து பார்த்தாள். மானிட வடிவம் தாங்கிய திருமால் நின்றிருப்பதைக் கண்டாள். அவர் வந்த காரணத்தைக் கேட்டாள். விப்ரநாராயணர் கொடுத்தனுப்பியதாகக் கூறித் தான் கொண்டுவந்த பொற்கிண்ணத்தைத் தேவதேவியிடம் கொடுத்தார். அவள் அதனைப் பெரிதும் ஆர்வமுடன் வாங்கிக் கொண்டாள். விப்ரநாராயணரைத் தன் வீட்டுக்கு அனுப்பி வைக்குமாறு கூறிவிட்டு உள்ளே சென்றுவிட்டாள்.

பக்தவத்சலனான பரந்தாமன் விப்ரநாராயணரின் கண்களுக்குத் தோன்றியருளினார். தேவதேவி உள்ளே வரச்சொன்னதை விப்ரநாராயணரிடம் கூறிவிட்டு மறைந்திருந்தருளினார். உள்ளம் குளிர்ந்த விப்ரநாராயணர் விரைந்து உள்ளே சென்றார். அன்றிரவு தேவதேவியின் வீட்டிலேயே தங்கினார்.

இரவுப் பொழுது நீங்கியது. கோவில் கதவு திறக்கப்பட்டது. கோயிற்காப்போர் கோயிலுக்குள்ளிருந்த பொற்கிண்ணத்தைக் காணாது திகைத்தனர். அரசரிடம் சென்று இச்செய்தியை அறிவித்தனர்.

பொற்கிண்ணத்தைத் தேடிக் கண்டுபிடித்துத் தன்னிடம் கொணருமாறு ஏவலர்களுக்குக் காவலன் கட்டளையிட்டான். ஏவலர்கள் பல இடங்களிலும் தேடிச் சலித்தனர். இறுதியின் தேவதேவியின் வீட்டில் அப்பாத்திரம் இருக்கக் கண்டனர். தேவதேவியைப் பாத்திரத்துடன் அரசன் முன் கொண்டு வந்து நிறுத்தினர். மன்னன் அவளைப் பல வகையிலும் விசாரணை செய்தான்.

தனக்கு ஒன்றும் தெரியாது என்றும், விப்ரநாராயணர் கொடுத்தனுப்பியதாக அழகிய மணவாளதாசர் என்பவர் அப்பாத்திரத்தைத் தன்னிடம் கொடுத்தனுப்பியதாகவும் தேவதேவி மன்னனிடம் கூறினாள். மன்னன் விப்ரநாராயணரை அழைத்து விசாரித்தான்.

தனக்கு ஏவலாளர் யாரும் இல்லை என்றும், தான் அப்பாத்திரத்தைக் கொடுத்து அனுப்பவில்லையென்றும் விப்ரநாராயணர் மன்னரிடம் உறுதிபட எடுத்துக்கூறி நின்றூர்.

திருட்டுப்பொருளை வாங்கிய குற்றத்திற்காகத் தேவதேவிக்கு மன்னன் அபராதம் விதித்தான். விப்ரநாராயணரைச் சிறையிலிட்டான். பக்தன் சிறைப்பட்டதைக் கண்ட பிராட்டி பக்தனைச் சோதிக்க வேண்டாமென்று மீண்டும் திருமாலை வேண்டிக்கொண்டார். எனவே திருமால் மன்னன் கனவில் தோன்றி நடந்தவற்றையெல்லாம் விபரமாக எடுத்துக் கூறியருளினார். திருமாலின் வாய்மொழியைக் கேட்ட மன்னன் உடனே விப்ரநாராயணரைச் சிறையிலிருந்து விடுதலை செய்யுமாறு ஆணை பிறப்பித்தான்.

திருமாலுக்குத் தொண்டு செய்வதை மறந்து பெண்ணின் பதத்தில் ஈடுபட்ட தன் தவறை நினைந்து நினைந்து விப்ரநாராயணர் கண்ணீர் விட்டார். எனவே சான்றோர்களை அணுகினார். தான் செய்த தவறுக்குத் தக்க பரிகாரம் கூறுமாறு வேண்டிக் கொண்டார். திருமாலடியார்களின் திருவடித் தீர்த்தத்தைப் பருகுவதே தக்க பரிகாரம் என்று அச்சான்றோர்கள் கூறினர். இவரும் அவ்வாறே திருமாலடியார்களின் திருவடித் தீர்த்தத்தைப் பருகித் தம் பாவத்தை கழுவிக் கொண்டார்.

இவ்வாறு விப்ரநாராயணர், தொண்டர்களின் அடிப்பொடியைத் தன் தலைமேல் கொண்டு போற்றியதால், இவருக்குத் 'தொண்டரடிப்பொடியாழ்வார்' என்னும் திருநாமம் வழங்கலாயிற்று.

தொண்டரடிப்பொடியாழ்வார் திருவரங்கப்பெருமானின் நினைவாகவே இருந்து, தொண்டு செய்து தம் காலத்தைப் போக்கி வந்தார். 'அன்பர்தாள்தூளி' என்று இவரை உலகம் அன்புடன் அழைக்கலாயிற்று. தம் பக்தியநுபவங்களையெல்லாம் பிரபந்தங்களாகப் பாடியருளினார்.

இவர் பாடிய பிரபந்தங்கள் இரண்டு. அவை திருமாலை, திருப்பள்ளியெழுச்சி என்பன. திருமாலை 45 பாசுரங்களும் திருப்பள்ளியெழுச்சி 10 பாசுரங்களும் ஆக 55 பாசுரங்களைப் பாடியருளினார்.

பிறவி வேண்டாப் பெற்றியரான இவர் பாடல்களைப் படிப்போர் தம் பிறவித்துன்பம் நீங்கப் பெறுவர் என்பது உறுதி.

"வேதநூற் பிராயம் நூறு
மனிசர்தாம் புகுவ ரேனும்
பாதியும் உறங்கிப் போகும்
நின்றதில் பதினை யாண்டு
பேதை பாலகன தாகும்
பிணி பசி மூப்புத்துன்பம்
ஆதலால் பிறவி வேண்டேன்
அரங்கமா நகருளானே!"

-தொண்டரடிப்பொடியாழ்வார்.



# சூரிய வம்ச வரலாறு

திரு. பி. ரவீந்திரன் - திப்பிராஜபுரம்.

சூரிய பகவானே உலகத்து உயிர்கட்கு ஆதாரமாகவும் சாட்சியாகவும் விளங்குவதால் இவரை வேதங்கள் "ஜகத்சக்ஷு" என்று அழைக்கிறது. ஆதித்ய ஹ்ருதயம் இவரை த்ரிமூர்த்தி ஸ்வரூபியாக வர்ணிக்கிறது. இக்காரணம் பற்றியே இவர் "ஹிரண்ய கர்ப்பன்" என்று அழைக்கப்படுகிறார். செய்நன்றி மறந்தவனை தண்டிப்பது இவரது தனிச் சிறப்பாதலால் இவருக்கு "கிருதக்னக்னன்" என்றொரு பெயரும் உண்டு. இவர் உலகத்துக்கு மழையைத் தருகிறார். நோயைப் போக்குகிறார். ஜனங்களைத் தந்தையைப் போல் காப்பாற்றும் இவரை சோதிட நூல்கள் "பிதுர்காரகனாக" போற்றுகின்றன. இவர் "விவஸ" என்ற சிறந்த மணியை அணிந்துள்ளதால் "விவஸ்வான்" என்று பெயர் பெற்றார்.

இத்தகைய ப்ரத்யட்ச தேவதையான சூரியனின் குலவரிசையைப் பற்றி நாம் நினைப்பதே மஹத்தான புண்ய கார்யமாகும். சூரிய வம்ச மன்னர்களைப் பற்றி ஸ்ரீமத் ராமாயணம், பாகவதம், விஷ்ணுபுராணம், காளிதாசரின் ரகுவம்சம் ஆகியவை போதிய தகவல்களைத் தருகிறது. புராணம் வேறு, வரலாறு என்பது வேறு அல்ல. கி.மு. ஆறும் நூற்றுண்டுக்கு முற்பட்ட கால தகவல்களை மத்ஸ்ய, பவிஷ்ய, வாயு, புராணங்கள் தருகின்றன. புராண சாஸ்த்ர வல்லுனர்களான வாதிராஜர், வியாசராயர், அப்பய்ய தீட்சிதர் முதலிய மஹான்கள் விஜயநகரப் பேரரசர்களிடம் வசித்து வந்தனர். கி.பி. 731ல் கனோஜை ஆண்ட யசோவர்மனிடம் உத்தரராம சரிதம் எழுதிய பவபூதி அவைப் புலவராக இருந்துள்ளார். கீத கோவிந்தம் எழுதிய ஜயதேவரை மாளவ நாட்டை ஆண்ட முதலாம் போஜர் ஆதரித்துள்ளார். புஷ்ய மித்ர சுங்கரின் நண்பரான பதஞ்ஜலி முனிவர் தனது வியாகரண மஹா பாஷ்யத்தில் சுங்க வமிச அரசர்கள் கிரேக்கர்களை வென்று இரண்டு அசுவமேத யாகங்கள் நடத்தியதைக் குறிப்பிட்டுளளார். கி.பி. நான்காம் நூற்றுண்டில் வாழ்ந்த காளிதாசர் தனது மாளவிகாக்னிமித்ரம் என்ற நூலில் கி.மு. 187 முதல் கி.மு. 151 வரை ஆர்சாண்ட சுங்கவம்சத்தைச் சேர்ந்த ஒரு அரசர் விதர்ப்பதேசத்தை வெற்றி கொண்ட நிகழ்ச்சியை குறிப்பிடுகிறார்.

தற்காலத்தில் வரலாற்று ஆசிரியர்கள் உலக வரலாறுகளைத் தொடுப்பது போல முன்னாளில் பௌராணிகர்கள் தமது நூலில் மன்னர்குலங்களைப் பற்றி எழுதி வைத்தனர். இவ்விதம் சூரிய பகவானையே முதல் அரசராகக்



கொண்டு சூரிய குலம் ஏற்பட்டது. சூரிய பகவானுக்குச் சாயாதேவி என்ற மனைவியிடம் சனி பகவான், சாவரணிமனு, தபதி என்ற பெண் ஆகியோரும், ஸம்க்ஞாதேவியிடம் வைவஸ்வத மனுவும், யமனும், யமி என்ற பெண்ணும் பிறந்தனர். விவஸ்வான் என்று புகழப்படும் சூரியனது புதல்வரான இந்த வைவஸ்வத மனுவே இவ்வுலகில் முதலில் உயிரினங்களைப் படைத்தவராவார். வைவஸ்வத மனுவுக்குப் பத்து புதல்வர்கள் பிறந்தனர். இவர்களில் மூத்த மகனான இக்ஷ்வாகு என்பவன் தர்மம் வீர்யம், கீர்த்தி யாவற்றிலும் சிறந்து விளங்கினான். சூரிய பகவானது பேரரான இக்ஷ்வாகு அயோத்தியை ஆண்ட மூன்றுவது அரசனாக விளங்கினார். இவர் இவ்வுலகம் முழுவதும் ஒரு குடை நிழலில் அரசு செலுத்தினார். இவருக்குப் பிறகு இவரது மகனான விகுக்ஷி என்பவன் அரசபீடம் ஏறினான். இவனது சகோதரனான தண்டகன் தெற்கு திசைப் பகுதிகளான தண்டகாரண்யம் முதலியவைகள் அடங்கிய பிரதேசங்களை அரசாண்டான்.

விகுக்ஷியின் மகனான புரஞ்ஜயன் அடுத்ததாக அயோத்திமணி மகுடத்தைச் சூடினான். புரஞ்ஜயன் தேவேந்த்ரனுக்கு உதவியாக அரக்கர்களுடன் போரிட்டான். போரில் இந்த்ரன் எருது வடிவம் தாங்கி இவ்வரசனுக்கு வாகனமாக விளங்கினான். எருதின் மீதேறி வீரப் போர் புரிந்த இவருக்குப் புகழ் தரும் வகையில் மக்கள் இவரை அன்புடன் "ககுஸ்தர்" என்று அழைத்தனர். இதனால் இவருக்குப் பின் வந்த ஸந்ததிகளை "காகுஸ்த குலம்" என யாவரும் போற்றினார்கள். இந்த புரஞ்ஜயனுக்குப் பிறகு அயோத்தியை

அனேனஸ், ப்ருது, விச்வ கந்தன், யுவனாச்வன், சாபஸ்தி, ப்ருஹதாச்வன், குவலயாச்வன் முதலிய அரசர்கள் முறையே அரசாண்டனர். குவலயாச்வனுக்கு மூன்று புதல்வர்கள் பிறந்தனர். இவர் அயோத்தியாதிபதியாக தனது மூத்த மகன் த்ருடாச்வனைத் தனக்குப் பிறகு நியமித்துவிட்டு மற்ற இரண்டு குமாரர்களான கபிலாச்வனுக்கும், பத்ராச்வனுக்கும் தனித்தனி ராஜ்யங்களை ஏற்படுத்திக் கொடுத்தார். த்ருடாச்வனுக்குப் பிறகு அயோத்தியை ஹர்யச்வன், நிகும்பன், பர்ஹிணாச்வன், க்ருதாச்வன், ஸேனஜித்து என்ற தர்ம சீலர்கள். அரசாண்டனர்.

அந்நாளில் மன்னர்கட்குப் பெரும்பாலும் காரணப் பெயரே சூட்டப்பட்டது. தவிர சூரிய குல மன்னர்கள் பெரும்பாலும் அசுவமேத யாகம் செய்ததாலும், சிறந்த குதிரைப் படையைப் பெற்றிருந்ததாலும், தமது பெயர் இறுதியில் குதிரையைக் குறிக்கும் அசுவன் என்று ஒரு தொடரை சேர்த்து அமைத்துக் கொண்டனர் எனலாம்.

ஸேனஜித்துக்குப் பிறகு இரண்டாவது யுவனாச்வன் அரசனாக முடிசூடினான். இவன் தனக்கு நீண்ட காலம் மக்கட்பேறு இல்லாததால் இந்த்ரனைக் குறித்து புத்திர காமேஷ்டி யாகம் ஒன்று நடத்தினான். இந்த்ரனது க்ருபையால் இவ்வரசனுக்குப் பிறந்த புத்ரனே மாந்தாதா என்று கூறப்படும் மன்னனாகும். குழந்தைப் பிராயத்தில் மாந்தாதாவை தேவேந்த்ரனே தனது திருக்கைகளில் தூக்கிக் கொண்டு தேவாமிர்தம் ஊட்டி வளர்த்தான். மாந்தாதா உலகம் முழுவதும் தன்னிகரில்லா சக்ரவர்த்தியாக விளங்கி புகழாக அரசாண்டதால் ராவணன் முதலிய அரக்கர்களும் கூட இவ்வரசரைப் பகைத்து கொள்ளத் தயங்கினார்கள். மாந்தாதாவுக்கு பிந்துமதி என்ற மனைவியிடம் முறையே புருகுத்ஸன், அம்பரீஷன், முசுகுந்தன் என்ற புதல்வர்களும், ஐம்பது பெண்களும் பிறந்தனர். இப்பெண்களை ஸௌபரி என்ற முனிவர் மணந்து க்ருஷ்ணவதாரம் வரை ஜீவித்து இருந்தார். தேவர்களின் நண்பனான முசுகுந்தனும் க்ருஷ்ண அவதாரம் வரை வாழ்ந்தான். இதில வரும் அம்பரீஷன் வேறு. ஏகாதசீ விரதத்தின் சிறப்பை உலகிற்கு உணர்த்திய அம்பரீஷன் வேறு ஆகும்.

இவ்விதம் மாந்தாதாவுக்குப் பிறகு அவனது மூத்த மகன் புருகுத்ஸன் அரசு கட்டில் ஏறினான். இந்த புருகுத்ஸன் நாகர்குலப் பெண்ணுன நர்மதை என்பவளை மணந்து த்ரஸதஸ்யு என்ற மகனைப் பெறரூள். த்ரஸதஸ்யுவுக்குப் பிறகு இவனது புதல்வனான அனரண்யன் அரசனாக விளங்கினான். இந்த அனரண்யன் காலத்தில் இவ்வரசனிடம் ராவணன் பகைமை கொண்டு இருந்தான். தன் வம்சத்தில் பிறக்கும் குழந்தையே ராவணனுக்கு அழிவைத் தரும் ம்ருத்யுவாகி விளங்கட்டும் என்று இந்த அனரண்யன் என்ற அரசன் ராவணனுக்கு சாபம் கொடுத்து இருந்தான். இந்த அனரண்யனுக்குப் பிறகு ஹர்ய

சுவன், அருணன், த்ரிபந்துரன் முதலியவர்கள் அரசாண்டனர். த்ரிபந்துரனுக்கு ஸத்யவ்ரதன எனப்பெயர் பெற்ற த்ரிசங்கு மன்னன் பிறநதான். த்ரிசங்கு மஹாராஜாவுக்கு விசுவாமித்ரர் தனி உலகையே படைத்துக் கொடுத்து இவ்வுடலோடு சுவர்க்கம் அளித்தது யாவரும் அறிந்ததே. த்ரிசங்குவின் மகன் தான் ஹரிச்சந்திரன். இவ்வரசனே ஸத்யத்துக்காக ஸகலவித தியாகங்களையும் செய்தவனாகும்.

அரிச்சந்திரனுக்குப் பிறகு ரோஹிதன், ஹரிதன், சம்பன், ஸுதேவன், விஜயன், பேருகன், வ்ருகன், பாஹுகன் என்பவர்கள் வரிசையாக அயோத்தியை ஆண்டனர். இந்த பாஹுகனது மகனே சகர மஹாராஜா ஆகும். சகர சக்ரவர்த்தி சமுத்ரத்தை ஆழமாகவும் விரிவுப்படுத்தியும், உலக மக்களுக்கு நன்மை செய்தார். அறத்திற் சிறந்த இவர் காலத்தில் பேரரசு மிகவும் பரந்து கிடந்தது. இந்த சகரனுக்கு கேசினீ என்ற மனைவியிடம் அஸமஞ்ஜன் என்ற பெயர் உடைய மகன் பிறந்தான். ஸுமதி என்ற மனைவிக்கு அறுபதினாயிரம் வீரகுமார்கள் பிறந்தனர். இவர்கள் சகரனது அசுவமேதயாகக் குதிரையைத் தேடிச்சென்று கபில முனிவரது சாபத்தால் இறந்தனர். கேசினீயின் மகனான அஸமஞ்ஜன் ஊரில் உள்ள பல குழந்தைகளை சரயூ நதியில் எறிந்து விளையாடிய குற்றத்துக்காக சகர மன்னனால் நாடு கடத்தப்பட்டான். ஆனால் ஞானியான அஸமஞ்ஜன் அரசனது உத்தரவை அறிந்ததும் சிரித்துக் கொண்டே சரயூநதியில் இருந்து எல்லாக் குழந்தைகளையும் உயிருடன் மீட்டுத் தந்து விட்டுக் கானகம் சென்று விட்டான். அஸமஞ்சனுக்கு அம்சுமான் என்று ஒரு வீரகுமாரன் உண்டு. அம்சுமான் கபில முனிவரை வணங்கி இந்த்ரன கவர்ந்து சென்ற குதிரையை மீட்டு வந்ததோடு, இறந்த தம் குல முன்னோர்கள் ஆகாச கங்கை நீரைக் கொண்டு ஈமக்கடன் இயற்றினால்தான் நற்கதி பெறுவர் என்ற விபரத்தையும் அறிந்து சகரனிடம் தெரிவித்தான்.

ஆனால் கங்கையை வரவழைப்பதற்கு சகரனாலும் அடுத்து வந்த அரசர்களான அம்சுமான், தீலீபன் முதலியவர்களாலும் இயலவில்லை. தீலீபனது மகனான பகீரதனே கடும் தவம் புரிந்து கங்கையை பூமிக்கு வரவழைத்து சகரன் தொடங்கிய நற்காரியத்தைப் பூர்த்தி செய்தான். பகீரதனுக்குப் பிறகு அயோத்தியை ச்ருதன், ஸிந்துத்வீபன், அயுதாயு, ருதுபர்ணன் முதலிய அரசர்கள் ஆட்சி புரிந்தனர். இந்த ருது பர்ணன் நளமஹாராஜா காலத்தில் வாழ்ந்தவராவார். ருது பர்ணனுக்குப் பின்பு ஸர்வகாமன், ஸுகாஸன், மித்ரஸஹன் முதலியவர்கள் ஆண்டனர். மித்ரஸஹனது மறைமுக எதிரிகள் சிலர் சூழ்ச்சியாக நரமாமிசத்தை வசிஷ்ட முனிவருக்கு உணவாகப் படைக்கச் செய்து இச்செயலுக்குக் காரணம் அரசனே என்று முனிவரை நம்பச் செய்தனர். முனிவர் கோபித்து அரசனை அரக்கனாகும்படி சபித்து விட்டார். தவசீலனான மித்ரஸஹனும் முனிவருக்குப் பிரதி சாபம் கொடுக்கக் கையில் தீர்த்தத்தை எடுத்தான். ஆனால் மனைவி மதயந்தி தடுக்கவே அந்த ஜலத்தைத தன் கால்களில் ஊற்றிக் கொண்டான். மந்த்ரஜலத்தினால அரசனது கால்கள் கருநிறமாகியது. இதனால் கல்மாஷபாதன் என்று அழைக்கப்பட்டான்.

அரசன் மீது பிழை இல்லை என்பதைப் பிறகு ஞான த்ருஷ்டியால் உணர்ந்த முனிவர் பன்னிரண்டு ஆண்டுகள் கழித்து மீண்டும் அரசனுக்கு பழைய சுய வடிவம் ஏற்படும் என சாப விமோசனம் அளித்தார். அதன் படி மித்ரஸஹன் ஸௌதாஸன் என்ற பெயரில் அரக்கனாகத் திரிந்து மீண்டும் அரசனாக வாழ்ந்தான். மித்ரஸஹனுக்குப் பிறகு அச்மகனும், அச்மகனுக்குப் பிறகு பெண் மெய்க் காவலர்களை உடைய "நாரீகவசன்" என்பவனும் அயோத்தியை ஆண்டனர். நாரீகவசனுக்கு மூலகன் என்று ஒரு பெயரும் உண்டு. மூலகனை அடுத்து தசரதன் என்ற வீரன் நாட்டை ஆண்டான். இவன் ராமபிரானின் தந்தையான் தசரதர் அல்ல. இந்த தசரதனுக்குப் பின் ஜலபிலன், விச்வஸஹன், கட்வாங்கன் முதலியவர்கள் அரியணை ஏறினார்கள்.

கட்வாங்கன் என்ற இவ்வரசன் திருமாலின் அருள் பெற்று முக்தி அடைந்தான். இவனது மகனே தீர்க்கபாஹு எனப்படும் இரண்டாவது திலீபன் ஆகும். இம்மன்னனுக்கு நீண்ட காலம் மக்கட்பேறு இன்மையால் தன் மனைவி ஸுதக்ஷிணையுடன் வசிஷ்டர் உத்தரவுப்படி காம தேனுவின் கன்றுகிய நந்தினிக்குப் பணிவிடை செய்தனர். தெய்வப் பசுவான நந்தினியின் அருளால் தேவேந்த்ரனின் நண்பனான திலீபன் ரகு என்ற ஒப்பற்ற மகனைப் பெற்றான். திலீ

பன தொண்ணூற்று ஒன்பது அசுவமேதயாகங்களைச செய்த பிறகு நூறாவது யாகததைத தொடங்கினான. அபபோது யாகக குதிரையைக கவரநது சென்ற இந்திரனை ரகு வென்று தந்தையின யாகததை முடித்துக் கொடுத்தான். ரகுவுக்கு உரிய வயது வநததும் முடிய சூட்டிவிட்டுத் திலீபன் தவத்துக்குச் சென்றான்.

அரசனான ரகுவுக்கு வசிஷ்ட முனிவர் எங்கும் செல்லும் தெய்வீகத் தேர் ஒன்றினை அளித்தார். நந்தினியின் அருள் பெற்ற ரகு எந்தப் படைக்கலத்தாலும் வெல்ல முடியாதவனாக இருந்தான். ரகுவின் அரசாட்சி பரத கண்டம் முழுவதும் பரவியதோடு கடல் கடந்த நாடுகளும் அவனது ஆணைக்கு உட்பட்டன. தற்காலப் பாரசீகம், திபெத் ஆகியவை ரகுவின் வசம் இருந்தன. காளிதாசர் தனது ரகுவம்சத்தில் புராண காலத்தில் ஹ்யுஸ்னு என்றழைக்கப்பட்டுப் பிறகு ஹூணர்களாக மாறிய ஒரு இனத்தாரை ரகு வென்றதாகக் கூறுகிறார். வரலாற்றுப்படி ஹூணர்களின் பூர்வீகத்தை ஆராய்ந்தால் அவர்கள் ரோம் நாட்டில் வசித்ததாகவும், சீனாதான் என்றும், ஐரோப்பாவில் உள்ள ஆக்சாஸ் பள்ளத்தாக்கு என்றும் பலவிதக் கருத்துக்கள் நிலவுகின்றன எனவே ரகுவின் புகழ் உலகம் முழுவதும் பரவி இருக்க வேண்டும் என்றும் தெரிய வருகிறது. இந்த்ரனின் அன்புக்குரிய ரகு மஹாபலி செய்த "விச்வஜித்" என்ற யாகத்தைச் செய்தான். கொடையில் சிறந்த ரகு தன் குருவுக்காக உதவும் பொருட்டு குபேரனையும் வெற்றி கொண்டான்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த ரகுவுக்குப் பிறகு அழகிற்சிறந்த அஜன் என்ற அவனது மகன் முடிசூடினான். அழகும், குணமும் மிகக விதர்ப்ப நாட்டு இளவரசி இந்துமதியை, ஸ்வயம்வரத்தில் வென்று அஜன் திருமணம் செய்து கொண்டான். தன்னை வழியில் எதிர்த்த எல்லா அரசர்களையும் அஜன் "ஸம்மோகனாஸ்த்ரம்" என்ற படைக் கலத்தால் முறியடித்து நாடு திரும்பினான். இந்த அஜனுக்கும், இந்துமதிக்கும் தசரதன் என்ற மகன் பிறந்தான். தசரதன் அஸ்த்ரசஸ்த்ர வித்யைகளிலும், தர்மம், ஸத்யம் இவற்றிலும் சிறந்து விளங்கினான். திருமாலின் அவதாரமான ஸ்ரீராமபிரானின் தந்தையான இந்த தசரதர் தனது ஏழாவது வயதில் தன் அருமைத் தாயையும் பதினாறாவது வயதில் தன் அன்புத் தந்தையையும் இழந்தார். தசரதரின் தந்தை அஜன் சரயூ நதியில் தன் சரீரத்தை துறந்து முக்தி அடைந்தார். அஜன் தான் உயிருடன் உள்ள போதே தசரதனுக்கு முடிசூட்டிவிட்டார். நீண்ட காலம் புத்திரப்பேறு இல்லாது வருந்திய தசரதர் புத்திரகாமேஷ்டி யாகம் ஒன்று செய்து அதன் பலனாக ஸ்ரீமஹாவிஷ்ணுவின் அவதாரமூர்த்திகளான ஸ்ரீராம, லக்ஷ்மண, பரத, சத்ருக்னர்களைத் தம் புதல்வர்களாகப் பெறும் பாக்யம் பெற்றார்.

பிறகு ஸ்ரீராமனது பிரிவால் தசரதர் மறைந்ததும் பதினான்கு ஆண்டுகள் அயோத்தியில் பரதனால் ஸ்ரீராமபாதுகா ராஜ்யம் நடத்தப்பெற்றது. மனைவி ஸீதா தேவியுடன் கானகம் சென்ற ராமன் ராவணாதியரை வதித்து மீண்டு அயோத்யாதிபதி ஆனார் என்பது யாவரும் அறிந்ததே. தசரத சக்ரவர்த்தியின் குமாரர்களான ராமலக்ஷ்மண, பரத, சத்ருக்னர்கள், ராம தாஸனான அனுமனின் துணையுடன் நாட்டைத் திறம்பட ஆண்டனர். ஸ்ரீராமனுக்குப் பின் அவரது புதல்வர்களான குசன், லவன் இருவரும் முறையே குசாவதி, சராவதி என்ற இடங்களைத் தலைநகரர்க் கொண்டு கோஸல நாட்டைப் பரிபாலித்தனர். லக்ஷ்மணனுக்கும் ஊர்மிளைக்கும் பிறந்த அங்கதன், சந்திரகேது இருவரும் முறையே அங்கதீயா, சந்திரகாந்தா என்ற தேசங்களை ஆட்சி புரிந்தனர். காராபதம் என்ற நாட்டை இவர்கள் இவ்விதம் இரண்டாக்கிப் பெயர் மாற்றி அரசு புரிந்தனர். பரதனுக்கும் மாண்டவிக்கும் பிறந்த தக்ஷன், புஷ்கலன் இருவரும் முறையே தக்ஷசீலம், புஷ்கராவதி என்ற இடங்களை அரசாண்டனர். சத்ருக்கனுக்கும் சுருதகீர்த்திக்கும் பிறந்த சத்ருகாதி, சுபாஹு என்ற இருவரும் லவணசுரனைக் கொன்று சத்ருக்னன் பெற்ற மதுரா நகரையும், விதிசை என்ற தேசத்தையும் ஆண்டனர்.

சிலகாலம் கழித்துக் குசன் அயோத்தி நகர அதிஷ்டான தேவதை வேண்டுகோளுக்கிணங்கி தலைநகரை குசாவதியில் இருந்து அயோத்திக்கு மாற்றித் தன் முன்னோர்களைப் போலவே அரசு புரிந்தான். நாகர் குலத்தைச் சேர்ந்த குமுதவதி என்ற பெண்ணைத் திருமணம் செய்து கொண்டான். இறுதியாகக் குசன் இந்த்ரனுக்கு உதவியாகப் போரில் தாருகன் என்ற அரக்கனைக் கொன்று தானும் வீரமரணம் அடைந்தான். குசன் மனைவி

குமுதவதி அடுத்து தன் மகன் அதிதிக்குப் பட்டம் கட்டிவிட்டு உயிரை விட்டு விட்டாள். அதிதியின் தலைமுறைக்குப் பிறகு அவனது. ஸந்ததிகளான நிஷதன், நளன், நபன், புண்டரீகன், க்ஷேமதன்வா, அஹீனகு, பாரியாத்ரன், பலன், சிலன், உந்நாபன், வஜ்ரநாபன் என்ற மன்னர்கள் அரசு புரிந்தனர். இந்த வஜ்ரநாபன் என்பவன் சூரியனின் அம்சமாவான். வஜ்ரநாபனுக்குப் பின் சங்கணன், ஹரிதச்வன் என்பவர்களும் பிறகு காசி விச்வநாதரின் அருள் பெற்ற விச்வஸஹன் என்பவனும், பின் வித்ருதி என்பவனும் அரசாண்டனர்.

சூரிய வம்சத்தில் வித்ருதிக்குப் பிறகு ஹிரண்ய நாபன் என்ற ஞானியும் வீரனுமான அரசன் அரசாண்டான். இவ்வரசன் திருமாலின் அமசமாவான். இம்மன்னனிடம் யாக்ஞவல்க்ய முனிவர் சிலகாலம் சீடராக இருந்து அத்யாத்ம சாஸ்த்ரத்தைக் கற்றார். பிறகு அயோத்தியைக் கொஸல்யன், ப்ரம்மிஷ்டன், புத்ரன் என்பவர்கள் அரசு புரிந்தார்கள். கல்வி, வீரம் இவற்றில் சிறந்தவனும், ஜைமினி முனிவரின் சீடனுமாகிய இந்தப் புத்ரன் என்ற அரசன் சரயூநதியில் தனது பூத உடலை விடுத்து முக்தி பெற்ருன். புத்ரனுக்குப் பிறகு புஷ்யனும் பிறகு துருவசந்தி என்பவனும் அயோத்தியை ஆண்டனர். துருவசந்தி வேட்டைக்குச் சென்ற போது ஒரு சிங்கத்தால் கொல்லப்பட்டு இறந்தான். உடனே துருவசந்தியின் ஏழு வயதுக் குழந்தையான சுதர்சனன் என்பவன் ஆட்சியை ஏற்ருன். சுதர்சனுக்குப் பின் இவ்னது மகனான அழகிற் சிறந்தவனான அக்னி வர்ணன் என்பவன் முடி சூடினான். கலைகளில் தேர்ந்த அகனிவர்ணன் அரசுப் பொறுப்பை அமைச்சர்களிடம் ஒப்புவித்து விட்டுப் பெண்களுடன் அந்த புரத்தில் கேளிக்கைகளிலேயே காலம் கழித்தான். மனைவி கர்ப்பவதியாக உள்ளபோதே அக்னிவர்ணன் நோய்வாய்ப் பட்டு இறந்தான். அடுத்ததாக இவனது மகன் சீக்ரன் அரசனாக அமர்ந்தான். சீக்ரனுக்கு உரிய வயது வரும் வரையில் அக்னி வர்ணனின் மனைவியே நாட்டு நலன்களைக் கவனித்து வந்தான்.

சீக்ரனுக்குப் பிறகு இவனது மகன் மருத்து என்பவன் அரசன் ஆனான். இவன் மிகச்சிறந்த யோகி-தவசீலன். மருத்து சிலகாலம் நாட்டை ஆண்டு பிறகு தன் மகன் ப்ரஸ்னுவுக்குப் பட்டம் கட்டி விட்டு, அந்நாளில் கலர்பக்ரம் என அழைக்கப்பட்ட ஒரு சிறிய ஊரில் சென்று தங்கித் தவத்தில் ஈடுபட்டு விட்டான். சிரஞ்ஜீவியான இந்த மருத்து என்ற அரசன் இன்றும் வசிக்கிருன் என்று ஸ்ரீமத்பாகவதம் கூறுகிறது. இந்த அரசனே கலியுகம் முடிந்து மீண்டும் ச்ருஷ்டி தொடக்கத்தில் சூரிய வம்சத்தை உருவாக்கி ஸ்தாபிக்கப்போவதாக பாகவத புராணம் கூறுகிறது. மருத்துக்குப் பிறகு ப்ரஸ்து நாட்டைத் திறம்பட பரிபாலித்தான். ப்ரஸ்னுவுக்குப் பின்முறையே ஸந்தி, மர்ஷணன், ஸுமஹான், விச்வஸாஹ்யன், ப்ருஹத்பலன் முதலிய மன்னர்கள் அரசாண்டனர். மஹாபாரத காலத்தில் துரியோதனனின் நண்பனாக ப்ருஹத்பலன் இருந்தான். இவ்வரசன் பாரதப் போரில் அர்ஜுனன் மகன் அபிமன்யுவால் கொல்லப்பட்டான்.

இவனுக்குப் பிறகு அயோத்தியை முறையே ப்ருஹத்ரணன, உருஷதன், வத்ஸப்ரீதன், ப்ரதிவ்யோமன், பானு, தேவாகன், ஸஹதேவன், ப்ருஹதச்வன், பானுமான், ப்ரதீகாச்வன், ஸுப்ரதீகன், மருதேவன், ஸுரக்ஷத்ரன், ருஷகன், அந்தரிக்ஷன், ஸுதப்தன், அமித்ரஜித் என்பவர்கள் அரசாண்டனர். பிறகு மிகப் பெரும் செலவில் வாஜபேய யாகத்தை செய்த ப்ருஹத்வாஜியும், பிறகு பர்ஹி, தனஞ்ஜயன், ரணஞ்ஜயன், ஸ்ருஞ்ஜயன், சாக்யன், சுத்தோதகன், லாங்கலன், க்ஷத்ரகன், குணன், ஸுரதன், ஸுமித்ரன் முதலியவர்கள் கோசல நாட்டைப் பரிபாலித்தனர். ஸுமித்ரன் என்ற அரசனுடன் சூரிய வம்சத்தின் ஆட்சி முற்றுப் பெற்றது.

இத்தகைய சூர்ய வம்சமன்னர்களைப் பற்றி நாம் நினைப்பதால் நமது பாபங்கள் யாவும் நீங்குவதோடு சூரிய பகவானின் க்ருபைக்கும் ஸ்ரீராமபிரானின திருவருளுக்கும் பாத்திரமாகிறேம் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

"குலதைவத மஸ்மாகம்
கோதண்டசரமண்டிதம்
இஷ்டதைவத மஸ்மாகம்
இக்ஷ்வாகுகுல பூஷணம்



கூலமான காலமில்லை.

### விருச்சிக ராசி :

(விசாகம் 4ஆம் பாதம், அநுஷம், கேட்டை நட்சத்திரங்களிலும், நவம்பர் 15 இலிருந்து டிஸம்பர் 15க்குள்ளும் பிறந்தவர்கள்.)

இவ்வாணடு இந்த ராசிககாரர்களுக்கு அதிக அளவு இடையூறுகள் மிகுந்ததும் உற்சாகமில்லாததுமான காலமாகும். எல்லாத்துறைகளிலுமே அநுகூலமற்ற போககு தென்படுகிறது. விரோதிகளின் தொல்லை இருந்தாலும் முடிவில் அவர்களே தோல்வியுறுவர். உடல் நல விஷயத்தில் நாவில் சனி இருப்பதால் அதன் விளைவு அடிக்கடி இருந்துகொண்டே இருக்கும். உறவினரகள் விரோதமும் இருக்ககக்கூடும். ஆண்டின் நடுப்பகுதியில் சிறிதளவு அநுகூலம் தென்படுகிறது. என்றும் அது நிலையாக இராது. ஆண்டின் இறுதியில் எல்லாத் துன்பங்களும் ஓரளவு குறைந்து புதிய உற்சாகம் தோன்றும். அதுவரை நின்றுபோன அலுவல்கள் யாவும் வெற்றியடையும். மொத்தத்தில் இவர்களுக்கு இவ்வாண்டினைவிட அடுத்த ஆண்டு எல்லாவகையிலும் அதிக நன்மை பயப்பதாய் இருக்கும்.

### தனுர் ராசி :

(மூலம், பூராடம், உத்திராடம் 1ஆம் பாதம் நட்சத்திரங்களிலும், டிஸம்பர் 15 இலிருந்து ஜனவரி 15க்குள்ளும் பிறந்தவர்கள்.)

இவ்வாண்டு இந்த ராசிக்காரர்களுக்கு எல்லாவகையிலும் வெற்றி, லாபம், மகிழ்ச்சி அளிப்பதாக உள்ளது. இவர்கள் எல்லாத் துறைகளிலும் வெற்றி பெறுவர. வீட்டிலும் வெளியிலும மகிழ்ச்சியான சூழ்நிலை நிலவும. மாணவர்கள் தேர்வுகளில் எளிதில் வெற்றியடைவர். வழக்கறிஞர்கள், வர்த்தகர்கள், அரசியல்வாதிகள், ஆசிரியர்கள் போன்றோர் எல்லா வகையிலும் முன்னேற்றமும் மகிழ்ச்சியும் பெறுவர். மருத்துவர்கள் நல்லமுறையில் பயன்பெறுவர். பணத்துடன் கூடப் பேரும் புகழும் கிடைககும். உடல் நலம் இந்த ராசிக்காரர்களுக்கு நன்கு அமையும். ஆண்டின் முடிவில் சிறிதளவு அநுகூலமின்மை தென்படினும், இவ்

## முசுகுந்தன் பெற்ற பரிசு

சிவமூரத்தங்களில் ஒனறு சோம ஸகந்த மூர்த்தமாகும். பரம் பொருள் சதது, சிதது, ஆனநதம மூன்றும் கூடிய சச்சிதானந்தம் அல்லவா? இந்திரன் இம மூரததியை விஷ்ணுவிடம் வேணடிப் பெற்ருர. சிவம், உமை, முருகன மூன்றும ஒருங்கே விளங்கும் சோமஸ்கந்தமூர்த்திக்கு தியாகேசர் என்னும் திருப்பெயர் இட்டு இநதிரன் பூஜித்து வந்தார். இந்திரனுக்கும் அசுரன் ஒருவனுக்கு இடையே ஒரு சமயம் பெரும் போர் மூண்டது. அந்த ஆபத்து நேரத்தில் முசுகுந்தச் சோழன் என்ற மண்ணுலக மாமன்னன் இந்திரனுக்கு தோள் கொடுத்து துணைநின்ருன். இந்திரன் போரில் வெற்றி பெற்ருன். முசுகுந்தனுக்கு நன்றிக்கடன் செலுத்த இந்திரன் முனைந்தான். இந்திரன் வசம் இருந்த தியாகேசரையே முசுகுந்தன் விரும்பினான். தியாகேசரைத் தியாகம் செய்திட இந்திரன் தயங்கினான். முசுகுந்தன் விருப்பத்தை மறுத்திட முடியவில்லை. ஒரு நாடகம் ஆடினான். தியாகேசரைப் போலவே ஆறு விக்கிரகங்களைச் செய்து, தான் பூஜித்து வரும் தியாகேசருடன் அவைகளைச் சேர்த்து முசுகுந்தன் முன் மனம் கூசாமல் வைத்தான். "முசுகுந்த சோழரே! இவைகளில் எதை வேண்டுமானாலும் எடுத்துக்கொள்ளுங்கள்" என்ருன் இந்திரன். முசுகுந்தன், இந்திரன் பூஜித்து வரும் அந்த அரிய விக்கிரகத்தையே தேர்நது எடுத்துக்கொண்டான். இந்திரன் அரங்கேற்றிய நாடகம் முசுகுநதனிடம் பலிககவில்லை. இநதிரன மனம் சோர்ந்தான. மற்ற விக்கிரகங்களையும் முசுகுநதனிடமே கொடுத்துவிட்டான. முசுகுந்தன் மண்ணுலகம் திரும்பினான. தேவேநதிரன் பூஜித்த வந்த தியாகேசரை திருவாரூரில் எழுந்தருளச செய்தான். ஏனைய மூர்த்திகளை திருநள்ளாறு, திருநாகைக் காரோணம, திருக்காருயன், திருக்குவளை, திருவாய்மூர், திருமறைக்காடு ஆகிய தலஙகளில தனித்தனியே எழுந்தருளச்செய்தான். இவைகள் சப்தவிடங்கத் தலங்களாயின.

திருவாரூர் தியாகேசரை தேவேந்திரன் நாளும் வந்து பூஜை புரிகிறுன் என்று கூறுகிருர்கள். சோமஸகநத மூர்த்தியாய் விளங்கும் தியாகேசர் இங்கு உற்சவமூர்த்தியாகும். திருவிடைமருதூர் கோவிலின் பரிவாரத் தலமாகவும், சோமஸ்கந்த தலமாகவும் திருவாரூர் திகழ்கின்றது.

திரு. ஆர். சுப்பாராவ் - திருக்கோவலூர்.



வாண்டு இவர்களுக்கு எல்லா வகையிலும் இன்பமும் அமைதியும் முன்னேற்றமும் கிடைக்கும் ஆண்டாகவே இருக்கும்.

## மகர ராசி :

(உத்திராடம் 2, 3, 4ஆம் பாதங்கள், திருவோணம், அவிட்டம், 1, 2ஆம் பாதங்கள் நட்சத்திரங்களிலும், ஜனவரி 15இலிருந்து பிப்ரவரி 12க்குள்ளும்.)

இந்த ராசிக்காரர்களுக்கு இவ்வாண்டு நல்லதும் கெட்டதும் கலந்ததாகவே இருக்கும். ஆண்டின் முதல் பகுதியைவிட இரண்டாம் பகுதியில் சிரமங்களே மிகுதியாகத் தென்படுகின்றன. அதோடுகூட உடல்நலமும் கவலையளிக்கும். வர்த்தகர்களுக்கு இழப்பு ஏற்படும். உத்தியோகத்தில் இருப்பவர்களுக்கும் அலுவலகப் பிரச்சினைகள் எழும். மேலதிகாரிகளுடன் கருத்துவேற்றுமைகள் ஏற்படும். சனியின் இரண்டாவதுஆட்சி வீட்டில் சனியின் சஞ்சாரமிருப்பினும் குருவின் பார்வை, ஏழரை ஆண்டுச் சனி முடிவடையும் நிலை ஆகியவற்றால் இடைஞ்சல்கள் அவ்வளவு மிகுதியாக இரா. குழந்தைகள், குடும்பம் ஆகிய விஷயங்களில் சற்று இடர் இருப்பினும் விரைவில் விலகி மீண்டும் நல்ல நிலைமை உறுதிபெறும்.

## கும்ப ராசி :

(அவிட்டம் 3, 4ஆம் பாதங்கள், சதயம் பூரட்டாதி 1, 2, 3ஆம் பாதங்கள் நட்சத்திரங்களிலும், பிப்ரவரி 12இலிருந்து மார்ச் 15க்குள்ளும்.)

இவ்வாண்டில் இந்த ராசிக்காரர்களுக்கு ஜன்மராசியில் சனி இருப்பதால் அநுகூலமில்லாத பலன்கள் ஏற்படும். உடல்நலத்தைக் கவனத்துடன் பாதுகாத்துக்கொள்ள வேண்டும். செலவு மிகுதியாக இருக்கும். பிரயாணங்களினால் பயன் இராது. எனினும் அக்டோபர் மாதம் வரை குருவின் பார்வை இருப்பதால் இவ்இடர்கள் பெரும் தொல்லை எதுவும் தரா. ஆனால், பின்னர் ராகு, கேதுக்களின் சஞ்சாரம் விருப்பமில்லாத நிலையினையே தோற்றுவிக்கும். இருந்தாலும் அதிகத் துன்பம் ஏற்படாது. மாணவர்கள் மிகுந்த உழைப்பின் பேரிலேயே வெற்றிபெற முடியும். உத்தியோகத்திலிருப்பவர்களுக்குப் பெரும்பாலும் பயணங்களும் மாற்றங்களும் இருக்கும். ஆண்டின் முடிவில் இன்பமும் அமைதியும் நிரம்பிய காலம். உறவினர்களிடமிருந்து தேவையான உதவி கிடைக்கும். கௌரவம், ஆதரவு பெருகும்.

## மீன ராசி :

(பூரட்டாதி 4ஆம் பாதம், உத்திரட்டாதி ரேவதி நட்சத்திரங்களிலும், மார்ச் 15இலிருந்து ஏப்ரல் 15க்குள்ளும்.)

இந்த ராசிக்காரர்களுக்கு ஏழரை ஆண்டுச்சனி தொடங்கியுள்ளது. வேதை காரணமாக சனி, குரு ஆகியவற்றினால் பலன் இராது. பெரிதாக அநுகூலங்கள் எவையும் இல்லாத காலம். செலவு, பிரயாணம், வீண் உழைப்பு, உறவினர்கள் நண்பர்கள் ஆகியோர் பகை போன்ற தீய பலன்கள் தென்படுகின்றன. சனியின் பாதிப்பு முழுவதாக இருக்கும். எல்லா அலுவலகளிலும் இடையூறுகள், அநுகூலமின்மை, உற்சாகமின்மை போன்றவையே இருக்கும். உத்தியோகத்தில் இருப்பவர்களுக்கு மாற்றங்கள் இருக்கக்கூடும் என்றாலும் அவை லாபம் தருவதாகவே இருக்கும். வெளிவியவகாரங்களில் விழிப்புடன் நடந்துகொள்ள வேண்டிய சமயம்; சாதுர்யத்துடன் காரியங்களைச் சாதித்து வெற்றி காண வேண்டியிருக்கும். கோர்ட்டு, கச்சேரி அலுவல்களில் கவலை இருந்தாலும் முடிவில் வெற்றியே கிடைக்கும். ஆண்டின் முடிவு வரை எல்லா அலுவல்களிலும் நல்ல நிலைமை இருப்பதாகச் சொல்வதற்கில்லை. ஆண்டின் இறுதியில் நிலைமை சற்று மேம்படும்.

(தமிழாக்கம்: அ. நடராஜன்)



## அறிவுரை

அருளுரையைக் கேளாதவன் காதிருந்தும் செவிடன்.

மோட்ச வீட்டின் முன்னுரைதான் இந்தப் பூலோக வாழ்க்கை.

எவன் பிறரது நற்செயல்களைக் கண்டு மகிழ்ச்சி கொள்வதில்லையோ அவனால் நற்செயல்கள் எதுவும் செய்யமுடியாது.

-மார்க்கஸ் அண்டோனியஸ்

தொகுத்தவர்: கமலா மாரியப்பன் - கோவை.



# செய்திச் சுருக்கம்

திருபபதி நகரததில பாதா ளச் சாக்கடைத் திட்டததிற கென ரூ. 158.22 இலட்சம் தி. தி. தேவஸதான பொறுப்பாண மைக்குழு நடப்பு நிதியாண்டுக் கென ஒதுக்கியுள்ளது. இவ் வகையில், முதல்கட்டப் பணி களுக்காக முதல் தவணையாக ரூ. 25 இலட்சம் முதலில் ஒதுக்கப்படும்.

* * *

திருமலைக்கோயிலின் புஷ்க ரணி திருக்குளத்து நீரைத் தூய் மைப்படுத்தும் வகையில் 'நீர் சுத்திக்கரிப்பு' சாதனங்களைக் கொண்ட அமைப்பு ஒன்றினை திருமலையில் நிறுவ ரூ. 26.5 இலட்சம் ஒதுககப்பட்டுள்ளது.

* * *

1-1-94 அன்று திருமலைக்கு ஆயிரக்கணக்கான யாத்திரிகர் கள் வருவதை மனதிற் கொண்டு, அன்று, நித்ய அன் னதான திட்டத்தின்கீழ், திரும லையில் 25,000 யாத்திரிகர்க ளுக்கு இலவச உணவு வழங் குவதென்று குழு முடிவு செய் துள்ளது.

* * *

திருமலைக்கோயிலில் லட்டு விற்பனைக்கூடுகளின் எதிரில் ரூ. 5.5 இலட்சம் செலவில் பட் டைக்கற்களைக் கொண்ட தளம் ஒன்று அமைக்கப்படும்.

* * *

நாட்டின் பல்வேறு பகுதிக ளில் தி.தி. தேவஸ்தானத் தாரின் திருமண மண்டபங்க ளைக் கட்டுவதற்கு, நன் கொடையாளர்களிடமிருந்து ரூ. 10,000 அல்லது அதற்கு மேம் பட்ட நன்கொடை தொகை களை ஏற்றுக்கொள்வதென்று தி.தி. தேவஸ்தான பொறுப் பாண்மைக்குழு தீர்மானித்துள் ளது. இதுபோது, நன்கொடை யாளர்களின் பெயர்கள், திரு மண மண்டப வாயில் முன் அமைக்கப்படும் கற்பலகைகளில் பொறிக்கப்படும். மேலும் திரு மலையில் சில வசதிகளும் செய்து தரப்படும்.

* * *

திருமலையில் நடைபாதை வியாபாரிகளினால் ஏற்படும் பிரச்சனைகளைத் தீர்க் கும் வகையில் தி.த. தேவஸ் தான பொறுப்பாண்மைக் குழு வைச் சேர்ந்த சில உறுப்பி னர்களைக் கொண்ட துணைக் குழு ஒன்று அமைக்கப்பட்டுள் ளது. இக்குழு இன்னும் ஒரு மாதத்தில் தன் அறிக்கையை வெளியிடும்.

* * *

ஆந்திர மாநிலத்தில் சோம் பேட்டா (ஸ்ரீகாகுளம் மாவட் டம்) பிக்கனூர், தோணகுண்டா (நிஜாமாபாத் மாவட்டம்) புலி வெண்ட்லா மற்றும் எந்ர குண்ட்லா (கடப்பா மாவட்டம்) ஆலமூரு (கிழக்குக் கோதாவரி மாவட்டம்) குப்பம் (சித்தூர் மாவட்டம்) குண்டக்கல் (கர் னூல் மாவட்டம்) மற்றும் மர்ரிபேடா (வரங்கல் மாவட் டம்) ஆகிய இடங்களில் திரு மண மண்டபங்களை கட்டு வதென தி.தி. தேவஸ்தான மேலாண்மை முடிவு செய்துள் ளது.

* * *

நாட்டில் உள்ள தி.தி. தேவஸ் தான திருமண மண்டபங்களில் உண்டியல்களை வைப்பதென் றும், இந்து தர்ம பிரசார பரி ஷத் சார்பில் சமய நிகழ்ச் சிகளை மேலும் தீவிரமாக ஏற்பாடு செய்யவும், மேம்படுத் தவும் வழிவகுக்கும் வகையில் அந்தந்த திருமணமண்டபங்கள் மற்றும் தகவல் நிலையங்க ளைச் சார்ந்த உள்ளூர் ஆலோச னைக் குழுக்களுக்கு அதிகார வரம்புகள் மேலும் பலப்படுத் தப்பட்டுள்ளன.

சங்கத் தமிழ்மாலை
முப்பதும் தப்பாமே....

திருமலை திருப்பதி தேவஸ் தான ஆழ்வார் திவ்வியப் பிரபந்தத்திட்டத்துறை சார்பில் 'மார்கழி நோன்பு' திருப் பாவை விளக்கச் சொற்பொழி வுகள் டிசம்பர் 16ஆம் தேதி புதன்கிழமை தொடங்கி, ஜன வரி 14ஆம் தேதி முடிய திருப்பதி, ஹைதராபாத், குண் டூர், விசாகப்பட்டணம், மசூலிப் பட்டணம், வரங்கல், ஸ்ரீரங்கம், சென்னை, காஞ்சீபுரம், பெங்க ளூர், மைசூர் ஆகிய பதினொரு இடங்களில் ஆந்திரம், தமிழ், கர்நாடகம் ஆகிய மூன்று மாநிலங்களில் ஏற்பாடாகியுள் ளன. அதன்படி:-.

திருப்பதி ஸ்ரீ அன்னமாச் சார்யா கலாமந்திரத்தில் நாள் தோறும் காலை 7-30 மணிக்

குத் தொடங்கி 8-30 வரை ஒரு மணி காலம் ஸ்ரீமான் உ.வே. J. சேஷாத்ரி ஐயங்கார் சுவாமி, ஸ்ரீமான் K.K.A. ரங்கராஜன் சுவாமி, ஸ்ரீமான் உ.வே. P.C. கோபாலாசார்யா சுவாமி, ஸ்ரீமான் உ.வே. P.R. ரங்கராஜன் சுவாமி, ஸ்ரீமான் உ.வே. சிங்கராசார்ய சுவாமி ஆகியோர் ஐவரும் ஆறு ஆறு நாட்கள் தொடர்ந்து டிசம்பர் 16ஆம் தேதி தொடங்கி ஆண்டாள் திருப்பாவை சொற்பொழிவாற்றுவர்.

ஹைதராபாத் அகோபில மடத்தில் ஸ்ரீமான் உ.வே. V.P. ராமாநுஜாசார்யா சுவாமியும், குண்டூர், ரேபள்ளி ஸ்ரீகன்யாபரமேசுவரி கோவிலில் ஸ்ரீமான் உ.வே. S.B.L. நரசிம்மாரங்காசார்யா சுவாமியும், மசூலிப்பட்டணம் ஸ்ரீரங்கநாயகி சுவாமி கோயிலில் ஸ்ரீமான் உ.வே. P.T.G.V.L. நரசிம்மசார்யுலு சுவாமியும், வரங்கல் கீதாபவனில் ஸ்ரீமான் உ.வே. முடும்பி நரசிம்மாரங்காசார்யா சுவாமியும், ஸ்ரீரங்கம் ஸ்ரீமணவாள மாமுனிகள் சன்னதியில் ஸ்ரீமான் உ.வே. சுதர்சன பராசர லட்சுமி நரசிம்ம பட்டர் சுவாமியும், சென்னை தியாகராஜநகர் திருமலை திருப்பதி தேவஸ்தான செய்தி மையத்தில் ஸ்ரீகூர்மம் ஸ்ரீமான் உ.வே. S.T.P.V. கூர்மாசார்யா சுவாமியும், காஞ்சிபுரம் ஸ்ரீகாமகோடி சேஷாத்ரி சுவாமிகள் நிவாசத்தில் ஸ்ரீமான் சம்பத் அய்யங்கார் சுவாமியும், பெங்களூர் ஸ்ரீமகாலட்சுமி' மந்திரத்தில் ஸ்ரீமான் ஐக்கு சுதர்சனாசார்யா சுவாமியும், மைசூரில் முடும்பி நரசிம்மாசார்யா சுவாமியும் முப்பது நாட்கள் திருப்பாவைச் சொற்பொழிவாற்ற இசைந்துள்ளனர்.

மேலும் சித்தூர் மாவட்டம் புத்தூரில் 7-1-94 அன்று மாலை ஒரு நாள் திருப்பாவை விழாவும், ஹைதராபாத்தில் 1-1-94 முதல் 15-1-94 முடிய திருப்பாவைப் பாராயணமுறையும் ஏற்பாடாகியுள்ளன.

இன்னும் திருப்பாவைப் பாசுரங்கள் பள்ளிச்சிறுர்கள் நெஞ்சில் பதியவேண்டும் என்னும் நோக்கத்தோடு 10-1-94 அன்று திருமலை திருப்பதி பள்ளிகளில் 6ஆம் வகுப்பிலிருந்து 10ஆம் வகுப்பு வரை பயிலும் சிறுர்களுக்கு 6, 7, 8 வகுப்பளவிலும், 9, 10 வகுப்பளவிலும் இருநிலைகளில் திருப்பாவைப் பாராயணப் போட்டியும், 12-1-94 மாலை ஸ்ரீஅன்னமய்யா 'கலா மந்திரத்தில் பரிசளிப்பு விழாவும் திட்டமிடப்பட்டுள்ளன.

### அற்புத சாந்தி மகாயக்ஞமும் ஆழ்வார் பிரபந்தத்திட்டமும்

திருமலை திருப்பதி தேவஸ்தான சார்பில் பெங்களூர் வீராஞ்சநேயர் கோயிலில் டிசம்பர் 13 முதல் 17 வரை 5 நாட்கள் "அற்புத சாந்தி மகாயக்ஞம்" நிகழ்ந்தது. தேவஸ்தான தரும பிரசார பரிஷத், அன்னமய்யா, ஆழ்வார் திவ்விய பிரபந்தத்திட்டத்துறைகள் பங்கேற்றன. 17-12-93 அன்று ஆழ்வார் திவ்வியப் பிரபந்தத் திட்டத்துறை சார்பாக இசை நிகழ்ச்சி ஒன்று நிகழ்ந்தது.

பெரியாழ்வார் அருளிய 'பல்லாண்டு பல்லாண்டு...' என்னும் மங்களா சாசன பாசுரம் அடானா ராகத்திலும், 'எழுவார் வினை கொள்வார்.....' 'வகையறு நுண்கேள்வி.....' இடந்தது பூமி .....'என்னும் பொய்கையார் பாசுரங்களும் மூன்றும் சகானாவிலும், 'வந்தாய் என் மனம் புகுந்தாய்......' எனும் திருமங்கையாழ்வார் பாசுரம் ஹம்சத்வனியிலும் இசையமைத்துப் பாடப்பெற்றன.

இந்த ராகங்கள் முன்பு, 1200 ஆண்டுகளுக்கு முன்பு இவ்வாறு, இசையோடு பாடப்பெற்றன என்பது கருதத்தக்கது. அனுசந்தான கோஷ்டி நெறியோடு இத்தகு பண்டைய இசை நெறிக்கும் புத்துணர்ச்சியூட்டிக் காத்தலை ஆழ்வார் திவ்வியப்பிரபந்தத் திட்டம் கருத்தில் கொண்டுள்ளது.

தகவல்:

பொன். சௌரிராஜன்
துணை இயக்குனர்,
ஆழ்வார் திவ்வியப் பிரபந்தத் திட்டத்துறை

## விநாயகப்பெருமான் பெயர்கள்

விநாயகப்பெருமான் ஊருக்கு ஊர் பலப்பல பெயர்களுடன் விளங்கி அருள் பாலிக்கிறார். அவற்றுள் சில ஊர்கள்.

சிதம்பரம் : திருமுறை காட்டிய விநாயகர்.

சீர்காழி : ஆபத்து காத்த விநாயகர்.

திருவாவடுதுறை : துணை வந்த விநாயகர்.

திருச்செந்தூர் : தூண்டுகை விநாயகர்.

ஐயாறு : ஆதி விநாயகர்.

திருநாட்டியத்தான் குடி : கைகாட்டி விநாயகர்.

(3-ஆம் பக்கத் தொடர்ச்சி)

மனிதன் சமய அளவில் பரந்த மனப்பான்மையுடனும், சமூக நிலையில் உயர்வான நிலையிலும் இருக்கவேண்டியது இன்றைய தேவையாகும். இது எவ்வாறு சாத்தியமாகும்? இதுவரை கடந்து போன நாட்கள் தன் சமயத்திற்கும், தன் சமூகத்திற்கும், தன் கலாச்சாரத்திற்கும், தன் நாட்டிற்கும் பெருமைத் தரக்கூடிய வகையில் இருந்தனவா என்பதை வாழ்க்கையில் எல்லா நிலையினரும் சற்றே சீரிய சிந்தனையுடன் சிந்தித்தால், அதுவே நாளை ஒரு நல்ல எதிர்கால வாழ்க்கைக்கு இட்டுச்செல்லும் ஒரு நல்ல முயற்சியாக அமையும். அதனை இப்புத்தாண்டு முதல்நாளை நன்மூகூர்த்தமாகக் கொண்டு மேற்கொள்வதே, இப்புத்தாண்டை வரவேற்பதில், கொண்டாடுவதில் பொருள் இருக்கும்.

நல்ல குழந்தையைப் பெற்று வளர்க்க வேண்டும் என்ற தாயும், வீடும் நாடும் உயர நல்லறிவுடன் தன் பிள்ளை விளங்க வேண்டும் என்ற தந்தையும், பெற்றவரும், பெற்றநாடும் தன்னால் பெருமிதம் அடையவேண்டும் என்ற மகனும், நல்ல ஓர் ஆரோக்யமான எதிர் காலத்தை அமைத்திடும் மாணவர்கள் தன்னால் உருவாக வேண்டும் என்ற ஆசிரியரும், பொருளாதாரம் அரசியல், சமயம், விஞ்ஞானம் போன்ற துறைகளில் நாடும், உலகமும் கொடிகட்டிப் பறக்கவேண்டும் என்றும், வறுமையும், பிணியும் மனிதனை விட்டு அகல வேண்டும் என்றும் நினைத்திடும் பல்வேறு துறைவிற்பன்னர்களும் ஆகியோரே இவ்வுலகிற்கு இன்றைய உயிர்நாடிகளாகும். இதனை ஒவ்வொரு புத்தாண்டு புதுநாளினையும் கொண்டாடிடும் வாழ்க்கையின் எல்லா நிலையினரும் சற்றே உணர்ந்து தங்கள் வாழ்க்கை நெறிமுறைகளை வளப்படுத்திக் கொண்டால், அதுவே ஆண்டின் எல்லா நாட்களையும், ஆண்டின் முதல்நாளாக விளங்க வழிவகுக்கும். அதற்கு அந்த கலியுக வரதனான ஏழுமலையானின் திருவருள் நாளும் நமக்குக் கிடைப்பதாகுக.



## பொங்கல் பொங்குக!

புலவர் சீனி. இராமநாதன் - சேலம்.

வேங்கடவன் வநதான் வீட்டிற்கு
வேதனை தீர்க்கும பொங்கல்
தாங்கும் செல்வம் தாரணி
நிறைந்த மகிழ்ச்சி, தாரம்
வீங்கும் அறிவின் மழலைகள்
வீரம் செறிந்து விளங்க
நீங்கும் கவலை நீடாயுள்
பெறுவாய் தையிலே என்றுனே!

பக்தியில் மயங்கும பரமா
பதமாய்ப் பொங்கல் பொஙகி
சகதியே வடிவாம் உனக்குச்
சகமே புகழ அளிப்பேன்
முக்தியில் விளைந்த முனைப்புச்
சித்தியை அருளும் வேதநதே!
சிக்கெனப் பிடிததேன் உன்னை
சிறந்த பொங்கல்நீ உணணவே!

பாரைக் காத்து பகதரின்
செல்வப் பாரம் தாங்கிநீ
யாரை எண்ணி யாத்தாய்?
யாதவ குலத்து வள்ளால!
போரைப் புரிந்திடும் மக்களை!
போரை நீக்கிப் புண்ணியம்
தாரை வார்த்துத் தருவாய்!
தாரணி தைப்பொங்கல நாளிலே!

என்றே வேண்டிப் பாதம
பணிந்தேன் எங்கள் மனிதர்
நன்றே செய்து நானிலம்
தூய்மை அடைந்தே நலன்கள்
அன்றே பொங்கலின் போதே
விளையும் அன்புப் பொங்கல்
குனறெனக் குவித்து ஏழைகள்
வயிறு குளிரத தாவெனக்

கூறிக் கூத்திடும பெம்மான்
கூறிடும் தெய்வம் பலரை
மாறிய காலம் மாணிக்கப்
பொங்கல் திருநாள் தன்னில்
ஆறிய மனங்கள் ஆர்வப்
பொங்கல் உண்ண அழைத்து
வீறிடும் உன்வீட்டுப் பொஙகல்
உண்ண வருவேன் என்றுனே!

பொஙகல் பொங்குக திருமாலின்
புண்ணியத் தைமாதப பொங்கல்
எங்கும் உள்ளோர் ஏற்றம்
பெறவே எல்லாச் செல்வமும்
தங்கி உன்னதம் உறவு
தழைத்து உலகோர் இன்பம்
பொங்கும் பொங்கல் வருகின்ற
தைமாதப் பொங்கல் பொங்கலே!

Edited and published on behalf of T.T. Devasthanams by K. Subba Rao, M.A., and Printed at T.T.D. Press
by M. Vijayakumar Reddy, Manager, T.T.D. Press, Tirupati - 517 507

